உ

முருகன் துணை.

அம்பலவாணக் கவிராயரியற்றிய

# சிவமலைப் புராணம்.

இது

பழைய கோட்டை பட்டக்காரர்

ஸ்ரீமான் [illegible]

காமிண்ட நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார்.

[illegible]

விருப்பத்தின்படி,

விவேகதிவாகரன் பத்திராதிபர்

ஸ்ரீமான்,

தி. அ. முத்துசாமிக் கோனாரவர்களால்

பரிசோதித்து,

வசனசருக்கம் எழுதிச்

சேர்த்து,

திருச்செங்கோடு

விவேகதிவாகரன் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பட்டது.

1918.

இதன் விலை ரூ 1—4—0





உ

## அருணகிரிநாதர் அருளிச்செய்த
## பட்டாலியூர்த் திருப்புகழ்

இருகுழை யிடறிக் காது மோதுவ
பரிமள நளினத் தோடு சீறுவ
இணையறு வினையைத் தாவி மீளுவ—அதிசூர
எமபடர் படைகெட் டோட நாடுவ
அமுதுடன் விடமொத் தாளை யீருவ
ரதிபதி கலைதப் பாது சூழுவ—முனிவோரும்
உருகிட விரகிற் பார்வை மேவுவ
பொருளது திருடற் காசை கூறுவ
யுகமுடி விதனைப் பூசலாடுவ—வடிவேல்போல்
உயிர்வதை நயனக் காதல் மாதர்கள்
மயல்தரு கமரிற் போய்வி ழாவகை
உனதடி நிழலிற் சேர வாழ்வதும்— ஒருநாளே
முருகவிழ் தொடையைச் சூடி நாடிய
மரகத கிரணப் பீலி மாமயில்
முதுரவி கிரணச் சோதி போல்வய—லியில்வாழ்வே
முரண்முடி யிரணச் சூலி மாலினி
சரணெனு மவர்பற் றான சாதகி
முடுகிய கடினத் தாளி வாகினி—மதுபானம்
பருகினர் பரமப் போக மோகினி
அரகர வெனும்வித் தாரி யாமளி
பரிபுர சரணக் காளி கூளிகள்—நடமாடும்
பறையறை சுடலைக் கோயில் நாயகி
இறையொடு மிடமிட் டாடு காரணி
பயிரவி யருள்பட் டாலியூர் வரு—பெருமாளே.

கத்தூரி யமரு ம்ருகமத வித்தார படிர இமசல
கற்பூர களப மணிவன—மணிசேரக்
கட்டார வடமு படர்வன நிட்டூர கலக மிடுவன
கச்சோடு பொருது நிமிர்வன—தனமாதர்

உ

கடவுள் துணை.

# முகவுரை.

அநாதி மலமுத்த சித்துருவாகிய சிவபெருமானார். "ஆன்மாக்கள் நெறியறிந்து முத்தி நிலைக்கூடுக" என்ற தமதுளத்துக் கொண்ட பெருங்கருணையால், வேதாகம மெனனும் முதநூலை யருளிச்செய்தார். அது தோத்திர ரூபமான விதிபோதமாக இருந்ததலின், அக்கருத்தைத் தழுவியே வியாசமுனிவர் பதினெண் புராணங்களையும் கதாரூப ஞானபோதமாக இயற்றினார். அப்புராணங்களுள்ளே பலவகையான நீதிகளும், மார்க்கங்களும் கதைகளோடு சேர்த்து அலங்காரத்துடன் செய்யுட்களாற் கூறப்பட்டுள்ளன. இப்புராணங்களுள்ளே ஒருபிரகாரம், இல்லாது பொருந்தாததாயும், மற்றொரு பிரகாரம் இன்பரூபமாகவும் விளங்குகின்றன.

இந்தப் புராணங்களுள்ளும், உபபுராணங்களுள்ளும், பத்தியோக ஞானவழி நின்ற அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டுப் பரமேசுரன் எழுந்தருளிய திருப்பதிகளின் மகத்துவங்கள் கலந்து சொல்லப்பட்டிருக்கும். அப்பப்ப சுருக்கமாகச் சொல்லப்பட்டவற்றை விரித்தும், சொல்லப்படாது போனவற்றிற்குப் புராணமுறை தெரிந்து, வேறாகத் தலங்கள் குறித்துப் பலதல புராணங்கள், பல பெரியோர்களால் விளக்கப்பட்டுள்ளன. இந்நூல்களெல்லாம் வடமொழியிலிருந்ததால் பற்றித் தமிழ்மாந்தர்கட்குப் பயன்படுமாறு செந்தமிழாய்ந்த பெரியோர் பலர் தாங்கொண்ட கருணையால், தமிழில் மொழிபெயர்த்துதவியிருக்கிறார்கள். மற்றுந் தலங்களெல்லாம் பழங்காலக்கதைப்பெருமை பற்றியே சிறப்புடையன வெனக்கொள்ளக் கிடக்கின்றன. மேலோர் வழிபாடு செய்தநெறிகொண்டே மூர்த்தி தல தீர்த்தம் மூன்றுஞ் சிறப்புடையவாகின்றன. இப் பட்டாலி சிவமலை என்பது கந்தப்பெருமானுக்குகந்த தலமே. இங்குவழிபட்டோர்களும் மிகப்பெரியோர்களே. இச்சரித்திரமுங் கந்தப்

புராணம் ஈச சங்கிதையி லுள்ளதென வடமொழி மான்மியங் கூறியுள்ளது. வடநூற்புலவர் கூறியசரித்திரத்தை அம்பலவாண க்கவிராயர் தமிழ்ப் புராணமாகச் சொன்னயம் பொருணயம் பெ றச்செய்து போந்தனர்.

இந்தச் சிவமலைப் புராணத்தையும், சிவமலைக் குறவஞ்சி யையும் அடியார்கள் படித்துப் பத்திகொள்ளுமாறு, அச்சிட்டு, வெளியிடுங்கள் என்று நளவருஷம் தைப்பூசத் திருவிழாவன்று, குட்டைப்பாளயம் ஸ்ரீமான், அர்ச்சுனக் கவுண்டரவர்கள் பிரஸ் தாபித்தனர். பல இடங்கட்குப் பொருள்கொடுத்தும், ஆள்விடு த்துந் தேடியும் பிரதியகப்படவில்லை. குறவஞ்சி மாத்திரம் பரி சோதித்து எழுதப்பட்டு அச்சுவேலை நடந்து வருகிறது. நிக ழும் பிங்கள வருஷம் சூரசங்காரத் திருவிழா நடந்து, திருக்க ல்யாண உத்ஸவத்தன்று ஒருபுராணப் பிரதிகண்டு மேற்குறித்த கனவான் உதவப்பெற்றேன். அந்தப் பிரதி ஆதியும், அந்தமு மில்லாதது. ஆனால் எனது நண்பர், காங்கேயம் அஷ்டாவதானம் ஸ்ரீமான், C. V. சேஷாசலநாயுடு அவர்கள் 124 பாடலுள்ள ஏட் டுப்பிரதி ஒன்று கொடுத்தனர். கடந்த மார்கழிமீ முதல்தேதி (15-12-17) ல் பழயகோட்டைப் பட்டக்காரர், ராயபஹதூர் ஸ்ரீமான், உத்தமக்காமிண்டநல்லதம்பிச் சர்க்கரை மன்றாடி யா ரவர்களும், ஸ்ரீமான் அர்ச்சுனக் கவுண்டரவர்களும், அடுத்து வரும் தைப்பூசத்தன்று சிவமலைப்புராண முழுமையும், வசனமுஞ் சேர்ந்த அச்சுப் புஸ்தகத்தைப் பல பெரியோர்களுடனிருந்து சிவமலையிற் பார்க்க வேண்டுமென்று மெத்த ஆவலோடு அறி வித்தார்கள் காகிதத்துக்கென்று பொருளும் உதவினார்கள். மறுதினமே காங்கேயம் பட்டக்காரர் ஸ்ரீமான், மும்முடிக்கண பதிப் பல்லவராய மன்றாடியாரவர்கள் ஒரு ஓலைப்பிரதி உதவினர். இன்னுங் கிடைத்த சில பிரதிகளை வைத்துக்கொண்டு பரிசோ தித்து எழுதி, அச்சியற்றினேன். இப்பெரியோர்களின் விரு ப்பமும் எனது எண்ணமும் நிறைவேறும் வண்ணம், எவ்வகை இடையூறும் நேராது காத்துமுடிப் பித்த ஸ்ரீசிவசுப்பிரமணி யக்கடவுளது திருவருளைச் சிந்தித்து வந்திக்கின்றனன். சுபம்.

எட்டுப் பிரதிகளிருந்து அன்றன்று மூலச்செய்யுட்களை எழுதி, அச்சேற்றி ஒப்புநோக்கிப், பின்பு சிவமலைப்புராண வசனச் சுருக்கம் எழுதி அச்சியற்றியதுமாகிய விரைவு வேலையால் பிழைகளிருக்கவுங்கூடும். அருமைதெரிந்தோர் மன்னிப்பார்களெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பிரதிகள் உதவினோர்.

குட்டைப்பாளயம் ஸ்ரீமான், அர்ச்சுனக்கவுண்டரவர்கள் பிரதி 1

காங்கேயம் ஸ்ரீமான் மும்முடிக் கணபதி பல்லவராய மன்றாடியார் பிரதி 1

காங்கேயம் அஷ்டாவதானம் ஸ்ரீமான், C. V. சேஷாசலநாயடு அவர்கள் பிரதி 1

சிவமலை ஜோசியர் மகா-ஸ்ரீ ராமசாமி குருக்கள், பிரதி 1

பிங்கள ஹு தைமீ
19—1—1918
திருச்செங்கோடு.

இங்ஙனம்.
தி. அ. முத்துசாமிக்கோனார்,

உ

## நூலாசிரியர் வரலாறு.

சீர்வளம்பொருந்திய சோழமண்டலத்திலே, பூர்வஞ் சைனத்திற் பிரிந்து, சைவத்திற் புகுந்த நீறுபூசி வேளாள குலத்திலே, சாலிவாகன சகாப்தம், 1634, கி. பி. 1712 விஜய வருஷத்திற்பிறந்து 60 வது வயதில் இராமாயண கீர்த்தனைபாடி, தஞ்சாவூர் துளசி மகாஹாராஜா, அவ்வேந்தனின் அருமை நண்பரான புதுச்சேரி ஆனந்தரங்கபிள்ளை, மணலி முத்து கிருஷ்ண முதலியார், தேப்பெருமாள் செட்டியார் முதலியகனவான்கள் சபையில் அரங்கேற்றிப்பெருமையடைந்த, சீகாழி அருணாசலக்கவிராயர் என்னும் பிரசித்திபெற்ற மஹா வித்துவானைத் தமிழ்நாட்டில் தெரியாதார் இரார் அவருக்கு மூன்று குமாரர்கள். சேஷ்டகுமாரர் அம்பலவாணக்கவிராயர் என்பவர். இவர் பிறந்த வருஷக்கணக்குத் தெரியவில்லை; என்றாலும், இவர் தந்தை அருணாசலக்கவிராயருக்கு முப்பதுவயதில் விவாக

மானதென அவர் சரித்திரத்தில் தெரிகிறது. இதனால் இந்த அம்பலவாணக்கவிராயர் கி. பி. 1742-க்குமேல் பிறந்தவராக வேண்டும். இவர் இளமையிலேயே தமிழ் இலக்கிய இலக்கணங்கள் நன்குகற்றவர். சைவசித்தாந்த நூல்கள் முறையே பயின்றவர். கொங்குநாட்டின் கிழக்குக்கோடி எல்லையிலுள்ள கொல்லிமலை (சதுரகிரி) அறப்பளீசுரர் சதகம் ஒன்று கூறியுள்ளார். அச்சதகத்தின் 100-வது செய்யுளில்" அம்பலவாணகவிராயனுரு மென்புன் கவியையுஞ் சூடியே" என்பதனால் தெரிகிறது. பாடுவித்தோன் அச்சதகத்தின் முதற்பாட்டில" மோழை பூபதிபெற்ற வதிபனெம தருமை மதவேள்" எனக்குறிக்கிறார். இவனை 7-வது செய்யுளில், கங்காகுலத்தலைவன் என்றும், 73 வது செய்யுளில்" வேளாளர் குலதிலகன் என்றுங்கூறப்பட்டுள்ளன.

பின்பு இவர்சேலத்துக்குசென்றபொழுது, அங்கு நாளையும் நடக்குஞ் செருப்படித்திருவிழா நடந்தது. அங்குப்பிரார்த்தனைசெய்துகொண்டு போகின்றவர்கள், உண்டிகையில் தக்ஷிணைபோட்டுத் தலைகுனிந்தால் தோலால்தைத்துத் தட்டத்தில் வைத்திருக்குஞ் செருப்பையெடுத்துப், பூசாரி அடிப்பது வழக்கம்; இவருடன் அங்கு வந்தோர் இது என்ன ஐயா? விந்தையாக இருக்கிறது எனக்கேட்டார்கள். அதற்குக்கவிராயர்.

" மருப்பாலே சவுந்தரிய லகரிவரை வோணிறைக்கு மாகவிக்கும், விருப்பாலே பொருளுதவா லோபிகளைச்சேலநகர் வீறுமாரி, குருப்போலே வரவழைத்துப்பணம்பரித்து நிமிர்ந்ததலை குனியச்செய்து, செருப்பாலே யடித்தடித்துப் புத்திரவப் பலமுறையுஞ் செய்கின்றாளே.,,

எனவிடை பகர்ந்தனர். பின்பு திருச்செங்கோட்டுக்குச் சென்று ஸ்ரீ அர்த்தநாரீசுரர் தரிசனம்செய்து வந்தனர். தரிசித்தீர்களா? எவ்விதமாக இருக்கிறது என்று கேட்டவர்களை நோக்கி:—

"எத்தனையோ தமிழ்க்கலைஞரிருந்து தமிழாய்ந்தசொன்மை யிசைச் செங்கோட்டின், அர்த்தநாரீசுரரோவத்து விதப்பெரு நூனாருமவர்மெய் தீண்டுஞ், சுத்த சிவா சாரியரோ குடியமுனி நேரானார் சூழ்ந்தவாழுஞ், பத்திசாலிகள் சங்கப் புலவீணை யாவ ரெனிற் பகரவென்னே."

என இச்செயுளைக்கூறினர் என்பர். இவர் இங்கு நின்றுங் காங்கேய நாட்டிற் புகுந்தனர் இவரது சைவப்பொலிவும், பிர சங்க வன்மையும், வாக்குச்சாதுரிய மதுரமுங் கண்ட பட்டக் காரர் முதலியவிவேகிகள் இவரைக்கொண்டு சிவமலைப்புராணம் பாடுவிக்க வேண்டுமென்றுபேசி அறிவித்தார்கள். ஒப்புக்கொ ண்டு நல்ல நாளில் சபையிலேயில், சிவமலையப்பார் தரிசனஞ் செய்து புராணம் பாடத்தொடங்கி 14 சருக்கம் 497 விருத்தத் தில் புராணத்தைப் பூர்த்தி செய்தனர். தெரிந்த பட்டக்காரர் முதலான பத்திமான்கள், அரங்கேற்றுவித்துக் கவிராயர் மன மகிழ்ச்சி கொள்ளுமாறு சன்மானம் புரிந்தனர். புராணத்தில் அங்கங்கே பத்திச்சுவைமுதிரப்பொதிந்து சைவமணங் கமழு ம்படி இசைத்திருப்பது இவரது சிவபத்திவலியைக் காட்டுகி றது. பெரிய நூல்களிலே பயின்று அரிய கவிகளின் அமைவி லீடுபட்டவரும் அங்க வருணனை புரிவதில் நண்ணிய அறிவின ரென்பதையும், இப்புராணம், வள்ளிநாயகியார் திருமணச் சரு க்கத்தில்.—

"கனவினிலு மெமையெதிரே காணிலச்சங்கொண்டு வெய் யோன் கதிர் புகாத, வனமதனிற் கடிதோடும் வாவியெதிர் பொ ருதவஞ்சி மனைறந்து நின்று, முனைகொளு வெங்கணை தொடுத்து த் துணைவரொடுஞ் சேர்ந்தவனை முடித்தா னென்னத், தனுவிரா கவன் விரந்தனை நகைக்கு மடவால் தன் சாது மாதோ."

என்னுஞ் செய்யுள் முதலியவற்றாற்றெரிகிறது. சைவத்தில் இவர் கொண்டுள்ள மேலானமதிப்பை அகத்தியமுனி உபதேசச் சருக்கத்தில் 6, 7, 8, 9, 10. செய்யுட்கள் விளக்குகின்றன.

இவரது சைவசித்தாந்த சாஸ்திர ஞானத்தேர்ச்சியால் திரிபதார்த்த லட்சணத்தைச் சுருக்கிக்காட்டும் ஆற்றலை, அந்தச்சருக்கத்திலேயே,

"பகருதற்கரும் பதி பசு பாசமோர் மூன்றும்
இகழ்விலப்பதி போலவவ் விருமையு மநாதி
தகைமையாகிய பதியினைச் சார்ந்திடா பாசம்
நிகரிலப்பதி பொருந்திடிற் பாசம் நில்லாது.

என்பது முதலியன நன்கு புலப்படுத்துகின்றது, இப்புராணம் பாடுதற்கு உதவி புரிந்தவர்களின் தகுதி விளங்குமாறு நகுடன் சாபந்தீர்த்த சருக்கத்திற் கூறுமாற் காட்டியுள்ள வன்மை பாராட்டத் தக்கது.

வானவர்களிற் சிறந்தோர் மணிகண்டனுடன் மூவர்
மான மன்னரிற் சிறந்தோர் வழுதியுடனொரு மூவர்
மேன்மை வேளாளர் தமின் மிகச்சிறந்தோர் மன்றுடி
தானகன்ன னெனுந்தடக்கைச் சருக்கரை மன்றுடி மன்னன்

பன்னரிய புகழ்படைத்த பல்லவராயக் குரிசி
லென்னவரு மூவர்களுமேனைய வேளாளரும் வேன்
புன்னவர்க்குத் தொன்றுதொட்டு வழிவழியாயடிமை செய்வா
ரன்னவர்கள் குலதெய்வ மாகிநிற்ப னெங்கோமான்.

என்பன. இன்னும் இவர் வரலாறு அதிகம் தெரியவில்லை.

---

## சிறப்புப்பாயிரம்

மங்குறோய் பொழில் வான்றடவுபட்டாளி மான்மியந்தனைக்கலை வல்ல, புங்கவர் மதிக்கப் பொருணயஞ் சிறந்து பொலிவுறத் தமிழினிற் புனைந்தான், தங்கிய புகழ்சேர் சுழியனருணைசலக்கவி யுதவிய புதல்வன், இங்கித மிகுந்த வம்பலவாணனெனுங்கவி ராய நாவலனே.

❧(०)❧

உ.

முருகன் துணை.

# சிவமலைப்புராணம்.

## பாயிரம்.

## காப்பு.

### விநாயக வணக்கம்.

தானவாரியு மாங்கவ னுந்தியந் தடநீ
தானவாரிச னும்பணி வெள்ளியஞ் சயிலத்
தானவாரிய னடத்துறை நல்லமங்கை தருமுத்
தானவாரிமெய்த் தந்திதாள் சிரத்தினிற் றரிப்பாம்.

### பால்வண்ண நாதர் துதி.

நீர்கொண்ட கடல்சூழு நிலவுலக முழுதளந்த நெடியமாலும்
ஏர்கொண்ட சதுர்முகனு மிமையவரு மருமறையு மிறைஞ்சியேத்த
வார்கொண்ட களபமுலை மாதுநல்ல மங்கையுடன் மருவிவாழுஞ்
சீர்கொண்ட பட்டாலிப் பாலவண்ணர் திருமலர்த்தாள் சிந்தை
[செய்வாம். 1

### நல்லமங்கையம்மன் துதி.

நல்லமங்கை யாய்ப்பின்வரக் காட்டுமலர்ப் பதத்தோனும்
கமலத்தோனும், வில்லமங்கை கொண்டருச்சித் திடவாக்கு
வேண்டுபெரு விருப்பம நல்கும், மல்லமங்கை வாய்நாக மதிபுனை
ந்த பரமனிடம மருவிவாழும், நல்லமங்கை யிருதோக நகத்தா
ளையகத்திலுற நாட்டுவோமே 2

### கயிலாசநாதர் துதி.

அரியயன்வே ளிருசுடர்கள் முறைசெய்தொழி லவர்தமக்
கை யன்றேந்தியாருந், தெரியமதன் றனையெரித்துஞ்சிரந்தடிந்
தும் முனிநால்வர் தேறயோகு புரிந்தருநா ளுயிர்களின்பம் புணர
நீத்துமம்மைவிழி புதைத்ததனொன்று, கரியனிரு ளுறக்கண்டும்
மின்றுகயி லாயனையெங் கருத்துள் வைப்பாம். 3

## ஞானாம்பிகை துதி.

குனிசிலைமா ரனையெரித்து வெற்றிபெற்றெங் கருணைவிழிக்
கோதையார்மா, லினிநமக்கென் றெனவிருந்த விறையவன்
மேற் சாயகமைடர் தேலத்தாண்டிக், கனியெனவுள் ளுருகுடைந்தாணி
ன்சரணமென மற்றவனுள் கலங்கா வண்ணம், இனியவலப்பாக
மன்பி னீந்தஞா னாம்பிகைதா ளிறைஞ்சுவோமே. 4

## கணபதி துதி.

காமலையை யுரித்தவன்மீறா சிதைத்திசைப்பேர் தரித்தவ
னைக்கவின்கொள் சாமீ, காமலையிற் றிருமருப்பாற் பாரதப்
போர் பொறித்தமலர்க் கையானைச்சூ, காமலையும் வேல்பிடித்த
முருகனுக்கு முன்னவனைக் ககனத்தார்ப, காமலைதந்தருளு
மைந்து கரத்தானை யடிபணிந்து கவலைதீர்ப்பாம். 5

## வேறு. குமரக்கடவுள் துதி.

இலகுமதிவே ணியனுமைதன் னெழிலார் குறங்கின் மணி
ப் புயத்திற், கலபமயிலின் முதுகிலன்பர் கருத்தின்வேதா கம
முடிவி, னலகின் முனிவர் சுரசபன்மா லணியுமகுட முடிமிசை
யிற், குலவுகுமா னிருசரணக் குளிர்பொற்கமலம் வணங்கல்
செய்வாம். 6

## இதுவுமது.

விந்தமதமுஞ் சூர்மருகர் விறலுங்கெடுத்த குறுமுனிவன்
சந்தவிசைச்செந் தமிழறியச் சாற்றுங்குரவன் சிவன்விழியில்
வந்தசிறுவ னிமையபாயின் மதலைகங்கை மடந்தைதருங்
கந்தன்மணிக் கிண்கிணிச்சரண கமலமெமது கருத்துள்வைப்பாம்.

## வேறு. தெய்வயானை துதி.

சகமுண் டுமிழ்ந்தோன் பெருந்தவமுஞ் சதவேள்விக்கோ
னுயர்தவமும், புகலவரும் வாரணமரிதாய்ப் புரிந்ததவமுந் தருங்
குமரி, குக்கின்மஞ் சரிப்பன் னிரண்டுபுயக் குவட்டிற் றிளைக்கும்
கள்பமுலை, யிகல்வேல் விழிக்குஞ் சரிபதப்போ திணையெம்
மிதயத்திருத்தல் செய்வாம். 8

## வள்ளிநாயகி துதி.

கலைப்பனுவ லாட்டிமலர்க் கரமும்விண்ணாட் டரமகளிர்கர
மூமேனற், புலத்திலவருங் கிளிகடியப் பொருந்தலமைத் திடு
மிதணும் புயல்போன்மேனி, வலத்தசுரர் குலகால வைவேலோ
ன் செம்பொன்மணி மகுடமாறுர், அலத்தகமுமங் கடவியசீறடி
வள்ளிநாயகிதா ளகத்துட் சேர்ப்பாம். 9

## வேறு. திருநந்திதேவர் துதி.

கண்ணுதற்றிரு வடிதொழு வருமயன் கண்ணன்
விண்ணுளோர்பில மீதுளோர் தவமுனி வேந்தர்
எண்ணிலாதவர் நெருக்கற மணிப்பிரம் பேந்து
மண்ணல்நந்தித னடிமலர் முடிமிசை யணிவாம். 10

## வீரவாகு தேவர் துதி.

மாரவாகுலந் தவிர்த்தினி தாகியமகிழ்வு
கூரவாகுமன் றனைவனத் திடைவரக் குறித்த
பாரவாகுவீ ராறுடைப் பண்ணவற் கிளைய
வீரவாகுவைச் சிந்தையில் விளங்கவைத் திடுவாம். 11

## அகத்தியமுனிவர் துதி

சகத்தானை யன்றவனை மகவானையரவாகச் சாற்றுமெ
ய்வா, சகத்தானைக் கிரிதுளைத்த தண்டானை யொருபத்தாத்
தலைபானைக்கீ, சகத்தானை கொண்டு வென்றோன் றனைப்பரமன்
செய்தானைத் தவரிற் செல்யா, சகத்தானைப் பரவுதிரு வகத்தா
னை நித்தமுமஞ்சலி செய்வாமே. 12

## ஆஞ்சநேயர் துதி.

மருவிருந்த கடம்பணியு மார்பன்சொல் பணிசிரத்து
மனத்துந்தாங்கிப், பொருவிகந்த சிவமலையின் மாருதநிக்கினி
லிருக்கும் புனிதன் பூவிற், றிருவுறங் கொண்டாற் கிளையோன்
முதலெழுபான் வெள்ளமெனுஞ் சேனையுய்ய, வருமருந்து தரு
மனுமன் பாதப்போ தெப்போது மகப்போதுய்ப்பாம்.* 13

## வேறு.

### திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் துதி.

அத்திருக்கலைத் தந்தருள்செய் யன்னைமுலைப்பா லினிதருந்தி
யத்திபணங்கு வடிவமைத்தோ னடிமாமுளரி யகத்தினிற்கொண்
டத்திநாத்தி யெனும்நாவா ராத்தகற்றா ணதுபுணையா
யத்திகடந்தோன் பதம்பரவு மடியார்சரணுக் கன்புசெய்வாம்

### சுந்தரர் மாணிக்கவாசகர் துதி.

மாமுதலைத் தடிந்தகதிர் வைவேலோன் திருத்தாதை மகி
ழப்பாடி, யேமுதலை வாய்ப்பிள்ளை யீனத்தந்தோ னிருசரண
மேத்திக்கூடற், கோமுதலை யொன்பதுநாற் கோடிக்காய் மால
யன் கண்கொண்டு காணா, மாமுதலை மாமீதில் வரவழைத்தோ
ன்சரண மலர் மனதுட் கொள்வாம். 15

### நக்கீர தேவர், அருணகிரிநாதர் துதி.

நுதலின்விழி காட்டினு நீ நுவற்றிசெய நுவல்பிழையே நே
க்கர வென்ன, முதலவன்முன் வலிபேசு முருகாற்றுப் படைப்பு
லவன்முளரித் தாளும், அதிமதுர ரசமொழிதமினிய திருப்புக
ழ்ப்பாடி யருள் சேராறு, வதன னருள் பெறு மருணகிரிநாதர்
கழலுமென்னுள் வளருமாதோ. 16

### பொன்னம்மை துதி.

தன்னிகரிலாத சத்திசிவமலைவாழ் தலத்தார்கா னீகர்நாட்
டா, தன்னசரின் மற்றுமுள்ளா ரைங்கரன்கீழ் ஒளித்தபணி யக
லைவானத், இன்னிலையிற் கரநீட்டி யேந்திவர வழைத்தெவர்க்
கும்பிகைசையக் காட்டும், பொன்னம்மை யெனுந்தாயை மறவாமலெ
ப்போதும் புந்திசேர்ப்பாம். 17

### வேறு அவையடக்கம்.

தெரியுநான் மறைகடேறுச் சிவபரன் குருவாம் வேலன்
சரிதம தகனையான்செந் தமிழினுற் சொலமதித்தல்
கரியமை முகிலிடத்திற் காணுமிர் திரவிற்பற்றப்
பரிபுர மலம்பச்செல்லும் பாலனைநாகு மன்றே,

பண்டருந் தவர்க்குச் சூதன் பகர்வடமொழியை யானும்
தண்டமி ழதனாற் சொல்லும் தன்மைவா ரிதியோ ரேழு
முண்டிடு முனிவோர்வாரி யுண்பெனென் றொருவனவகை
கொண்டுநீர் தன்னையள்ளிக் குடித்திடன் மானுமன்றே. 19

சேடனுயி ரநாவினாற் கற்பித்துஞ் செப்பக்
டொணாச் சிவகூடலைக்குகள்சரிதம் யான் கூறல்
நீடுமிவ்வுல கிருளெலா நீக்குவன் யானென்
றோடிமின்மினி யொன்றொளிகாட்டுத லொக்கும். 20

வேறு.

இப்புவியெலா மதிக்கத் தக்கவிலை பெற்றதொரு வியன்மா
ணிக்கம், குப்பையிலே கிடந்திடினு மிகழாமற் கொள்வாருந்தக்
கொள்கைபோலச், செப்புமிலை வள்ளியங்கள் றிருப்புகழாகையி
னல்யான் செப்புமிப்பா, வொப்பிலைய தாயிடினுங் கைக்கொ
ள்வ தன்றிநல்லோ ரிகழ்ந்திடாரே. 21

---

பாயிரம் முற்றிற்று.

## நைமி சாரணியச் சருக்கம்.

கண்ணகன்ற நீர்க்கலுழியும் வாசனைகமழும்
தண்ணெனுமகில் சந்தொடு வேய்முதற்றருவும்
விண்ணளாவியே மிடைதலான் மதிகதிர் வெய்யோ
னண்ணும்வெங்கதி ரொளிபுகா நைமிசாரணியம். 1

துன்றுவானவர் துயர்கெட முப்புரந் துலையக்
குன்றவார்சிலை யேந்திய பிறைமுடிக் கோமா
னன்றிவேறொரு கடவுளை வழிபடாவகஞ்சேர்
வென்றிமாதவர் தொகுதியே யிடந்தொறும் விரவும். 2

பரிதிவெங்கதி ரினம்புகாப் பான்மையாற் பரந்த
விருளிருந்திடப் படவரசபணி விளக்கெடுக்கும்
பொருவின் மாதவர் புரிந்திடு மகத்தெழு புகையைக்
கருமுகிற்குல மெனமயி னடித்திடுங்கண்டு. 3

ஆங்கவன்றன் முகநோக்கி யரியதவத் தினர்யாரும்
பூங்கமலத் தோனைநிகர் புனிதமா தவசனனத
தீங்ககல நீயுரைத்த சிவதலத்தின் மகிமையெல்லாம்
யாங்கள்கேட் டூழ்வினைநீத் திதயமுவந் தமினாலும். 11

இக்குள்ள தலங்களினுஞ் சிறப்புடைத்தாய்க் குன்றெறிவேற்
கைக்குமர னினிதுறையுங் காரணமெய்த் தலமதுவா
மெய்க்கிரம மதனாலு மிணையின்றிப் புகழ்விளங்கு
மிக்கதல மொன்றினிநீ விளம்புதியென் றடிபணிந்தார். 12

வேத நாரணன காரணரு மெய்ப்பரன்
பாத பங்கய மற்றிய சிந்தையின்
மாதவத்தினா யாரும் வணங்கிடச்
சூதமாமுனி சொல்லலுற் றனரோ. 13

நைமிசாரணியச் சருக்கம் முற்றிற்று
காப்பு பாயிரம் உள்பட விருத்தம், 35.

## புராண வரலாற்றுச் சருக்கம்.

அளந்திடற் கரிதாங் காந்தமா புராணத்தா றுசங்கிதையி னிலாரும், விளம்பரு மீசசங்கிதை தன்னின் விவரிவினைக் கன்று கொண் டெறிந்த, களங்கனி வண்ணன் றனையான் செய்த கட முனி குரவனுங் கந்த, னுளம்பதிந் துறையு மகிமைசேர் தல மொன் றுளத்தினி னினிதுரை சாய்ந்து. 1

அரவணை யானும் பிரமனு மறையு மளப்பரி தாகிய வமலன் குரவன்வா னளவு குன்றெறி வேற்கைக் குமரவே ணறுமலர்க் கமலச், சரண்மனத் திருத்தி மெய்ம்மயிர் பொடிப்பத் தழு தழுத் தெழுமொழி பெயரக், கரமல ருச்சி மீதினிற் கூம்பக் கண்ணிலானந்தனீர் பெருக. 2

எத்தலங் களினும் விழுமிதாந் தலமு மியம்பருங் கங்கை யிற் சிறப்பாய்ச், சித்தியு மெய்ம்மை முத்தியு முதவுந் தீர்த்தமு மூன்றெனுஞ் சகத்தி, னுத்தமமாகு மூர்த்தியு முள்ள தோர்தல் முணர்வினிற் றெரிந்து, வித்தக முனிவர் யாவருங் கேட்ப மறை களும் வியந்திட விளம்பும். 3

புராணவரலாற்றுச் சருக்கம், முற்றிற்று
ஆ திருவிருத்தம் 38.

## சிவமலைச் சருக்கம்.

---

கவனமால் விடையவன் கருணையாலரு
ளுவமையில் கந்தவே ளுவந்து நிச்சலுந்
துவளுறா விடையிரு கோதைகோபா னிறை
சிவமலை மகிமையின் றிறங்கள் செப்புவாம். 1

அந்த மாதியின் றாகிய வமலனு மொருவன்
றந்த கந்தவே ளினிதுறை சிவமலைத் தன்மை
சந்த நான்மறை சகத்திர முகமதாய் விரிந்து
முந்தை நான்முக னுளிது மொழியமுற் றுதால். 2

ஆயினுஞ்சிறி தறிந்தவா றிசைக்குது மமலை
சேயி னின்னரு ளாலெனச் செழுமறை நூல்க
ளாயும் வேதவி யாதனு மடிகளொற் குரைத்த
தூயவாசக முறைசொல்வ னெனவன்பிற் சொல்வான் 3

வேறு.

கரியத னுரித்துப் போர்த்த கண்ணுதற் கடவுண் மேனாட்
டரியலர் புரங்கள் வெல்லத் தறுகண்வா சுகிநாணாக
விரிகதிர் பரப்புஞ் செம்பொன் மேருமால் வரையைப் பற்றி
வரிசிலை யாகக் கையின் வளைத்திடுங் காலைதன்னில் 4

அந்தமேருவி னுச்சியி னண்டங்கள் பரவச்
சந்த தஞ்சிவ பரனுறை தனிக்கொடு முடியொன்
றிந்த மாநிலத் திடைசிந்தி வீழ்ந்தது விதனால்
வந்த நாமமுஞ் சிவமலை யெனப்பெயர் வழங்கும். 5

வேறு.

ஆதியா முகத்திற் செம்பொ னடுத்திடு முகத்தின் வெள்ளி
யோதிய செப்பு மூன்று முகத்தினிற் கலியுகத்திற்
றீதிலாச் சிலையா மிந்தச் செய்கையாற் காமருபச்
சோதிமா மலையென் றம்பேர் சாற்றினர் ஆறக்கநாடர். 6

வேறு.

வானதி புடைமேற் றோய்தலா லொளிகொண் மாமதி தவழ்தலா லாத்தி, தேனவிழ் கொன்றை கூவிளமென்மேற் செறிதலாற் றூறுமவெண் றேறுதா, மென்மையாற் சத்தி சிவமென வெங்கும் விளங்கலாற் றேறுடை யதனன், மானிடங் கொண்ட வளத்தினன் முக்கண் வானவ னிகர்க்குமம் மலையே. 7

அண்டமு நிறைந்து மளக்கலாற் செய்பொருகமேற் பொலிதருமதனால், விண்டென வருநர் வினைபயந் ததனால் வேறுகாவங்கனமே வுதலாற், றண்டருக் குலங்க ளிரந்தா மிடைந்துதழைத்துருப் பசுமைகாட்டுதலால், வண்டுழா யலங்க லணிந்தகுன் பெளவமே மாயவ னிகர்க்குமவ் வரையே. 8

ஐந்துமா மலர்மே லிருத்தலாற் கலைமான் கண்டிட னுவரைதமிழ்று, லந்தமா னுந்தி வந்திடுதனு லாடக வுருவமா குகையாற், சந்தத மெண்க ணுறுதலாற் பலவாஞ் சராசரம் படைத்ததன்மையினுல், வந்தனைற் றசையு முகம்பெறு மதனுல் மலரவனிகர்க்குமச் சயிலம். 9

வேறு.

தான நீரென வருவியா றொழுகி மாதங்கப்
பான்மை காட்டிவந் தடுத்தவ ரிடர்துகட் படுத்தி
மேன்மை தங்கிய சித்திக ணகவிமிக் குயர்ந்த
வானை மாமுகத் தண்ணலை நிகர்க்குமவ் வடுக்கல். 10

வேறு.

அஞ்சிறைத் தோகை மஞ்ஞைமீ தூறலா லாதியாம் பரமனுல் வமலாற், றஞ்சமென் றமரர் பரவலாற் சத்தி தாங்கலாற்றலையிலா றுளதான், மஞ்சன் குறவர் வள்ளிமே சுருதலான் மாவினையட்டிடும் வலியாற், குஞ்சரி களப முலைகலந் திளைக்குங்குமரனை நிகர்க்கு மக்குன்றம். 11

நாகமோதுபுன் ஞாகமமைவனம்-நாகமோதுபுன் ஞாகமமைவனம்
கோகமாமதி லும்பர்குலங்களே-கோகமாமதி லும்பர்குலங்களே 18

மழுமின்ஞர்சொல்வி தத்தையே-பழகும் பஞ்சர தத்தையே
அழகு பஞ்ஞைக ணித்தமே-விழைவதாய்ச்செயும் நித்தமே 19

வேறு.

இன்ன தன்மைப வர்கிய வெழிற்சிவ மலையின்
அன்ன வாகனன் மாதவ ராருமறை பாவும்
சென்னி யாருடைத் தேசிக னினிதுவீற் றிருப்பான்
அன்ன வெற்பினுக் கிணையெழு புவனத்து மரிதால். 20

வேறு.

சிவமலை யென்றிடச் சிதையுந் தீவினை
சிவமலை யென்றிடத் திருவந் தெய்திடும்
சிவமலை யென்றிடச் சேரும் புண்ணியம்
சிவமலை யென்றிடச் சித்தியாகுமால். 21

வேறு.

ஒருகாலம் மலைசூழ்வோ ருலகமுழு வதுஞ்செங்கோ லோச்சிவாழ்வார்; இருகாற்சூழ்ந் திடுமவரே யிந்திரபட்டந்தரிப்ப ரிணையில்லாத, மருவார்பூங் கடம்பணியு மார்பனையவ் வரையிடத்தில் வந்து காண்போர், திருமாலி னுந்திவந்த வயனுமெப் புவி சிருட்டி செய்வான்றே. 22

வேறு.

சகமதினிற் காசிதில்லை யருணையாதித் தலங்கடனிற் புரியுமகந் தவங்க டானம், பகர்விரதம் பூசையிவை செய்யும் பேற்றிற் பலனையுதந் தருமிந்தப் பதியிற்செய்யி, னிகரிலிந்தக் கிரியிடத்தி லயில்வே லுங்கி நீங்காம லெனிதுறையுங் கந்தவேளைத், திகழுடுவிற் சிறந்திடுகார்த் திகைநாட் கண்டோர் சிவபதத்தில் வீற்றிருப்பார் திண்ணந்தானே. 23

வேறு.

தவர்பயி லிந்தச் சிவமலை யிடத்துத் தங்கிநன் னியதிகள் முடித்துப், பவமறுத் தெழுத்தோ ராறுமுச்சரித்துப் பங்கயக் கடவுளை முனிந்தோன், றிவனினி மலையைச் சூழ்ந்துமே லமர்ந்தசேயினைத் தெரிசனஞ் செய்யிற், கயிலையி லின்ப சாகரத் தழுந்துங் கயிலையங் கிரிக்கிறை யாவார். 24

உத்தமதரமாந் தலங்களை யனந்த முலகினி னிலைபெறு
மதனின், மெய்த்தரு தலங்க டில்லையே யாதி வியன்பதி பல
வத னுள்ளும், மத்த லயமா மேருவின் சிகர மாகையா லறு
முக னமரு, மித்தட மலையி னிகர்வதாய்ப் புவியோ ரேழினி
னியம்புவ ரெவரே. 25

வேறு.

வன்பினு லந்தப் பதியினிற் கொலைசெய மதுவுண விலை
மாத, ரின்ப மார்ந்திடப் பொன்பணி களவுசெய் திடவந்த
முறையானும், வெருவிய மனத்தி னினைத்திடி னெண்சித்தி
மெய்முத்தி தருமென்று, வன்பி னுனினைப் பவர்பெறும் பேற்
றினை யாவரே யளப்பாரால். 26

---

சிவமலைச் சருக்கம் முற்றிற்று.
ஆக விருத்தம், 64.

---

## சத்திமலைச் சருக்கம்,

அத்திரவி முத்திரும ணைவைய வுட்ப
ரெத்திசையு மேதொழு திறைஞ்சுசிவ வெற்பின்
மெய்த்தகுபு கழ்த்திறம் விளம்பினமவ் வெற்பே
சத்திமலை யென்றுபேர் தரித்தமுறை சொல்வாம். 1

வேறு.

கங்கை தங்கிய செஞ்சடைக் கடவுண் முனிமய
மங்கை யர்பிணை தலையங்கு மணம்புரிந் தனந்தந்
தங்க வெண்மழு வொருபுடை யுதித்தெனத் தோன்றுந்
தங்கு பேரொளி வெள்ளியம் பொருப்பிடை சார்ந்து. 2

புவன கோடியு முவமையில் கோயிலுட் புகுந்திங்
கெவரை யுந்தடை புரிகெனச் சிலாதர னியற்றுந்
தவப லன்றரு நந்திவந் தனைசெயச் சாற்றிப்
பவள வாயுமை நலந்திளைத் திருந்தனன் பன்னாள். 3

ஆய காலையி னிந்திரன் முதலிய வமரர்
காயும் வெவ்வட வைக்கனல் கடல்விடங் கடுங்கூற்
றேயுந் தீயகூ ரியற்றிடுங் கொடுமையை யெவர்க்கும்
நாயனார்க்குரைத் தகற்றுதுங் காயமென நடந்து. 4

ஏன மன்னமுங் காணரு மிமையவ ருறையும்
வான வந்தபொற் கோயிலின் வாய்தனில் வந்து
கூனி ளம்பிறைக் கண்ணிய மலைமகள் கொழுந
ஞான நாயக வருளுருவாகிய நாதா. 5

அறமனுத் துணை நினைகிலன் பாதக மனைத்தும்
நிறையும் நெஞ்சினன் சூரனு மவுணனுன் நெடுநாட்
சிறையி லுற்றெமர் படுந்துயர் செப்பமுற்றாதா
லிறைவ காத்தருளீயெனக் கூஉய்முறை யிட்டார். 6

வேறு.

திரைக்கடலொலியேபோ லிந்திரன் முதலாந்தேவரிம் முறை
முறை யிடலும், பரக்கெறி குமுத வாயுமை புணர்ந்த் தரிபணை
யீதில்வந் தையன், வரைப்புய நந்தி தனைவிளித் திங்கு வானவர்
தம்மையுய்த் திடெனக், கரக்கமலங்கள் கூப்பியாங் கவனுங்
கடவுளார் தம்மை யுள்ளுய்த்தான். 7

வந்திடுமமரரெம்பிரான் கமல மலரடி பணிந்துமுன் னிற்ப,
விந்துசேகரனுங் கவர்முக நோக்கி வியம்புவான் பொருவருஞ்
சேனைக், கந்தபோ ரவுணக் குலங்களை வாட்டித் தருதுநும்
மியற்றிரு வனைத்துஞ், சிந்தையி லையம் கொள்ளலீ ரிருக்கை
சேருமென் றினிதருள் செய்தான். 8

அமரர்கள் விடைபெற் றகன்றபி னெம்மை யாளுடைக்
குரவனை முகத்து, விமலனே ராறு முகத்தவ னுறனென் மென்
னுதல் விழிகளின் மிரண்டு, வமலமாம் புலிங்க முதித்தவப் புலி
ங்க மாறையும் பவனனக் கினிவா, னிமையவர் பரவுங் கங்கையி
லுய்க்க விவரவை தாங்கமைந் திலராய். 9

சந்திர மவுலிக் குரைக்க மற்றவனுஞ் சரவண நதிக்குற மிசவுந, தந்தி னுய்க்க வாறுமா மகவாய்ச் சலசமென் மலர் மிசை யினிதாய், வந்தநான் முகனுஞ் செந்திருமாலும் வானவர் முதல்வனுந் துதிக்க, விந்திளம் பிறைபோல வளர்ந்தினி திருந்தா னிறையவன் விழிவருங் குமரன். 10

வகிர்மதி புனையும் வேணியன் விழியின் மைந்தனைத் தந்தருள் செய்தி, சகமுழு தீன்ற வெம்பெரு மாட்டி தானறிந் திற்றைநாள் வரையி, னகமகிழ்ந் தன்பாய்த் தனனிடமாக வருள்புரியா துகண் ணிடமாய், மகவினைத் தந்தா னென்றுவெங் கோவ மனத்திடை கிளைத்திட வெழுந்தாள். 11

குருமணிக் கலன்க ளழுந்திடு பசிய கொம்பென நடந் திட மலைமான், மருமலர்க் கமலச் சீறடி பெயர்பய மற்றவள்தா ளணிசெம்பொற், பரிபுர மதனை யெநந்தை நோக்குதலும் பதித் திடு நவமணி யதனி; றிருபக டனினு மெழிலபெறு மொன் பான் சேயிழை யவருதித் தனரால. 12

மின்பரி புரத்தி னுதித்திடு மொன்பான் விளக்கிழை யவ ரையு மெநந்தை, யன்பொடு நோக்க வமரடர் மதையர்தம் பாலினந் தளிரிளவயற்றி, னின்புறு கருப்ப முறுகனு மதனை யிமய மான கண்டுவெந் தழலி, னின்புரெப் சொரிய மூண்டிடுங் கனல்போற் பெருகுவெங் கோபமே றுகொண்டு. 13

வேறு.

பரிபுரங்கரு பாவையர் தங்களைப் பார்த்துக்
குருமணிக்கலனி ருங்கிய கொய்யணீர் நீர்கோள்
கருவுயிர்த்திடா திருந்திடக் கடவிரென் றிசைத்துக்
கரு முகிற்குலம கண்படு கயிலையை நீங்கி 14

திருவும் வாணியுந் தவஞ்செய்துங் கண்டிதற் கரிய
விருமலர்ப்பதஞ் சிவந்திட நடந்துசென் றேகி
மருவலார்புரம் பொடித்தவர் முக்கணீ லொத்த
வொருத்த னிப்பெருஞ் சிவமலைச் சாரலி னுற்றாள். 15

இருள டங்கலும் பருகிட வெழுந்த செங்கிரணக்
கருணை பானுவிற் றிகழுமச் சிவமலை தனைக்கண்
டுருகு மன்பொடு நடங்கிரி புகசியி லொருபா
லருளொ டக்கலை முயன்றுகொண் டிருந்தன னமலை 16

இன்னவா றுமை தவமுயன் றிருந்தன ளாக
மன்னு நூபுரந் தனில்வரு மொன்பது மாதர்
கின்ன வெண்பதி நதியுடன் கங்கையுஞ் செறிந்து
பொன்னின் வார்சடைப் புண்ணியன் றிருவடி போற்றி 17

ஐய வெங்களுக் கண்டங்க ளனைத்தையு மீன்ற
தைய லம்பிகை தந்திடுங் கொடியசா பத்தான்
மெய்யு றுங்கருச் சுமந்தியா மெலிந்தனம் விரைவி
னுய்யு மாறருள் புரிகெனப் பணிந்தினி துரைத்தார் 18

இரந்து வேண்டிய மாதரை யெம்பிரா னோக்கி
முருந்தை வென்றிடு மூரன்மா துமையவண் முனிவாற்
புரிந்த சாபத்தை நீக்குவார் புவனத்தி லெவரே
இருந்த மற்றவ ளிடத்தினி னீவிர்கள் சென்று 19

அன்பி னோடிரப் பகலினு மவள்பணி தலைக்கொண்
டன்பு றப்பணி செய்திரே லுங்கள்பா லிரங்கி
யன்பினாற்புரி சாபத்தை மாற்றுவ ளுங்க
ளன்பெலா மகன் றினியதாஞ் சுகம்பெறு வீரால் 20

தெக்க ணத்திசை தனிலுயர் சிவமலை யிடத்தின்
மைக்கண் மாதுமை தவத்திருக் கின்றனள் வனச
மொக்கு ளன்னபூண் முலைத்துணை மடநல்லீர் நீவி
ரிக்கணத் தினிற் சென்மினென் றிறையவன் மொழிந்தான்

ஏற்றின் மேல்வரு மெம்பிரா னருள்சுரந் தினிதாய்ச்
சாற்று வாசகஞ் சித்தினு மனத்தினுந் தாங்கி
மேற்றலைக் கிழித் தெழுந்திவ ணெற்பில் வந்தெய்தி
யாற்று நற்றவ வுமைமுன்வந் தடிதொழு தேத்தி 22

இந்த மால்வரை தன்னினி லிருந்தவ மியற்றிடு மதனாலிக், கந்தரக்கிரிப் பெயர்சத்தி மலையெனச் சொற்றிடப் பொலிந் தோங்கு, மந்த ரத்தளவாம் வெள்ளி மலையினு மதிகநல் விருப் பாய் நின், மைந்த னுங்குகன் வாசமுற் றிடுமிதன் மகிமையா ரறிவாரே. 35

என்ன வோதிமுன் னோன்மலை மங்கையைப் பீடமே லுகந் தேற்றிக், துன்னு பூதவெம் படையொடு கயிலையஞ் சோதி மால் வரைச்சார்பிற், பொன்னி னண்மல ரம்புயம் பூத்திடும் புனற்சர வணத்தெய்தித், தன்னை நேரிலா னுமைமுக நோக்கி நின்றனையரைக் காணென்றான். 36

பனிவ ரைத்திரு மாதுமம் மகார்தமைப் பார்த்தினி தருள் கூர்ந்து, நனி மகிழ்ச்சியின் மூவிரு சேயையும் நளினமென் கர மோச்சி, யினி தெடுத்தன ளோருரு வாய்முக மிரண்டுமூன் றொருமுந்நான், கெனு மணிப்புய மாகினன் மேலவர்க் கிறை வனாமொரு கந்தன். 37

அன்ன தன்மைய தாகிய மைந்தனை யணிமணிக் குறங்கே ற்றிப், பொன்னி னன்னமென் றிதலைகள் பூத்தொளிர் பொம்மல் வெம் முலைத்தீம்பா, றன்னை நன்மணி வள்ளத்திற் சொரிந்து மைந்தனுக் கருளூட் டூட்டி, யென்னை யாளுடை யானுக்குந் தனக்கும் நன்னிடையில் வைத்தினி தாக. 38

சுரர்கள் கற்பக நறுமலர் பொழிந்திடத் துந்துமி யைந்தா ர்ப்ப, வரகரா வெனக் கணங்களு முனிவரு மடியருந் துதித் தேத்த, விரவுறுர மகளிர்முன் னடித்திட விஞ்சைய ரிசைபா டக், கரையிலா மகிழ் சிறந்திட விலையிலாக் கயிலையுச்சியி னெய்தி. 39

ஏற்றி னின்றிழிந் தெம்பிரா னிமையவெற் பீன்ற மங்கை யுமாகு, மாற்றருந் திறற் குகனொடுங் கோயிலின் வந்தரி யணை மீதில், வீற்றிருந்தனன் பூவினின் வந்தவன் மேகமேனியன் விண்ணோ, ராற்றல்சால்கண நாதரு முனிவரு மடியிணை பணி ந்தேத்த. 40

வேறு.

கொந்த லர்க்கருங் குழலுமை வெள்ளியங் குவட்டிற்
சிந்தை யன்பொடு பரனுடன் சென்றபின் சிலம்பின்
வந்த மாதரார் கொள்கரு வூதிர்ச்சியால் வருந்தி
யந்த சத்துயர் சிவமலை யதனிலே யிருந்தார். 41

சத்திமலைச் சருக்கம் முற்றிற்று.

ஆ விருத்தம் 105

## வீரைச்சருக்கம்.

வேறு

சூரனெஞ்சமுங் கிரவுஞ்ச சயிலமுந் துளைத்த வேலனைத்தந்த
காரைநேர்கருங் குழலுமை தவஞ்செய்த காரண மதனுன்முன்
றானை வென்றிட வருமலை சத்தியென் றுற்றதை யுரைத்தாம்பின்
வீரைமாநக ரென்றொரு திருப்பெயர் மேவியகதை சொல்வாம் 1

வெள்ளி மால்வரைக் கோயிலி னரியணை மேவியபின் வெள்ளைப்
பிள்ளைமாமதிப் பிளவணி வேணியன் பிராட்டி தன்முக நோக்கி
வள்ளைவார்குழை மாதுநின்பத மலர்மணிச்சிலம்பினில் வந்த
கள்ளருமலர்க் கோதையர் கொண்டிடுங் கருப்ப மங்கதனாலே. 2

பொருவி லாதமெய் வருந்தின ரவர்பெறும் புதல்வரா னவராரு
மருளினே நீநல்கியகுமரனுக் கன்புட னேவற்செய்
பெருமை நீங்கிலாத் துணைவராய்த் தூணிடை பிறந்திடுமரிபோலு
வெருவலங் கையாழ்புடைத்திடும் வலியுள வென்றி வீரர்களாவார்.

அன்னதாலவர் கருவுயிர்த்திடும்வகை யருள்புரி கெனவீசன்
சொன்ன வாய்மைகேட்டகங்களி தூரும்பிடத் தோகைநல்லவளுங்கா
ரென்னும் வார்குழ லூபுரமாதர்க ளின்னணமினிதாகப்
பின்ன மின்றியே கருவுயிர்த் திடவெனப் பேசின ளருளோடும்.

வாரிணங்கிய மூலைத்திரு மடந்தையும் வாணியும் பணியுந்தாட்
பாரவெம்முலை யுமையவ ளிம்மொழி பகர்தலுஞ் சிவவெற்புச்
சாரல்வாயுறு மொன்பது மாதருந் தடக்கையின் வாள்கொண்ட
வீரவாகுவே யாதிய வொன்பது வீரர்கடமைப் பெற்றார் 5

### வேறு.

வந்த மாதவ னாறிரு முகமுடை வள்ளல்
கந்தமா மலர்ச் சேவடி பணிந்து கைகூப்பி
முந்தை வேதனுந் தெளிகிலா மறைப் பொருண் முழுது
மெந்தை யேயெளி யேன்றெளிந் திடும்வகை யிசைத்தாய் 3

ஆங்க தன்றியே பதஞ்சலிக் கமலன்முன் னுரைத்த
தீங்க கன்றிடும் வடமொழிக் கெதிர தாய்ச் செப்பும்
பாங்கி ருந்தமி ழியலெலா முரைத்தனை பரிவாற்
றேங் கருட்கிட னுனையன்றி வேறிலைத் தெரியின் 4

மாற்ற ரும்பிறப் பறுத்துநின் மலரடி நிழலின்
வீற்றி ருந்திடும் படிக்கருண் மெய்ம்மையா கமத்தி
னாற்றை யேற்கினி தருள்செய வேண்டுமென் றடியிற்
போற்றி நின்றிடக் கருணையாங் குமரவேள் புகலும். 5

தரும சிந்தனை யுடையவ ராய்த் தவம் பயின்றவராய்
அருமறைப் பொரு ளாய்ந்திடு மகத்தராய்ச் சன்னக்
கருவ கற்றிடு முயர்ச்சியிற் கலந்தவன் பினராய்ப்
பொருவி லாவுபதி ரிடத்தன்பு பூண்மனத் தினராய். 6

ஆக்க மாகிய வானுரு வாகுமஞ் செழுத்து
நீக்க மின்றியே பயின்றிடும் நினைவுடை யவராய்த்
தீக்கை சுத்தரா யிருக்குமச் செய்கையோர்க் கிறைவன்
வாக்கி னாற்சொலு மாகமம் வகுந்திட லாமால். 7

தான மன்மகம் பொறைதவந் தருமநல்லொழுக்க
மேன்மையாங்குல மொடுகல்வி விச்சையாசார
மானதம்வெளி யிரண்டினும் பூசனைமகிமை
யானநற்குண மியாவுமுன் னிடத்தினி னமைந்த. 8

ஆதலா லுனக் கோதலா மெனவுரைத் தங்குப்
பேத மொன்றிலாத் துணைவராம் வீரரைப்பிரிந்து
காதலித் தருநீழலிற் றனித்திருந் தினிய
வீதரத்துடன் குறுமுனி தெளிந்திட வருள்வான். 9

வேறு.

எந்தைதன் னான்கு திசைமுகந் தனினு மெழுந்ததா லியப்பருவேத
மந்தமி லுச்சி முகத்தினி லுதித்த தாகம மதனை யெம்மனை
வந்தனை செய்ய வுரைத்தன னெந்தை மற்றவன் மடியினிலிருந்து
சிந்தையன்புறயாம்கேட்டன மதனைத் தெருட்டுவ னுனக்கெனச்செப்பி.

வேறு.

பகரு தற்கரும் பதிபசு பாசமோர் மூன்று
மிகழ்வி லாப்பதி போலவவ் விருமையு மநாதி
தகைமை யாகிய பதியினைச் சார்ந்திடா பாசம்
நிகரிலப்பதி பொருந்திடும் பாசம் நில்லாது. 11

என்ன வவ்விய றனையெலா மெடுத்தினி தியம்பி
பன்னு மங்கையிற் கனியெனத் தெருட்டினன் பதும
னின்ன முந்தெரி யாமறைப் பொருளினை யீசன்
தன்னுளம்பெரு மகிழ்வுறச் சாற்றிய குரவன். 12

அருளொடுங்குகன் மொழிந்திடுமாகம மனைத்தும்
மொருதரஞ்சொன வுடனுணர்ந் தலகெலாஞ் சொல்லும்
பொருளும் போனிறைப் பூரண வடிவ மாந்தன்மை
மருளெலாங் கெடத் தெளிந்தனன் மலையமா முனிவன்.

அகத்திய முனி உபதேசச் சருக்கம் முற்றிற்று.
ஆ விருத்தம். 133.

---

## அகத்தியமுனி பூசைச் சருக்கம்.

மாயச் சூரன் மருக ரிருவர் மெய்
தீயக்காய்ந்திடுஞ் செந்தமிழ் மாமுனி
நேயத்தான் மலை நேரிழை தந்தருள்
சேயைப்பூசனை செய்முறை யோதுவாம். 1

எந்த வேளையில் யாதுகேட்பினுமவை யாவுஞ்
சிந்தையாகுலந் தீர்த்திடச் செப்பின னெனக்குத்

வேறு

தந்தை தன்னினுந் தாயினுந் தமரினு மன்பாம்
எந்தை கந்தவே ளெனநினைந் தகத்திடி னிசைப்பான். ௨

வேறு.

வரையரசன் பண்டுசெய்த மாதவத்தின் மாகவிளை மாணிக்கன்றே
கரையிலபிற விக்கடலைக் கடக்கவருள் செய்தபெருங் கருணைக்குன்றே
இரவுபகற் றனித்துணையே யுயிர்க்குயிரே யாருமிணை யில்லா நின்னை
பரவியருச் சனைபுரிய வெனமனத்து பூண்டதெனப் பரிவிற் சொன்னான். ௩

வேறு

வேலையுண்டிடு தவமுனி யிவ்வுரை விளம்பலு மதுகேளாச்
சேலைநேர் விழியுமை யவளருளிய திருமகனொரு கோடி
காலையாதவ னொருபுடை யுதித்தெனக் கவின்றுறப் படிவத்தின்
சீலமாமயின் மீதினிற் றோன்றினன் னிகரில வேற்படை தாங்கி. 4

முனிவரன் கண்டதீர்த்தமு மகிழ்ச்சி மூண்டிட நீர்படிந் திடுதற்
கினியமா தீர்த்தமொன் றுகண்டங்கை யிருத்திடவ் வண்டிகைக் கங்கை
தனையுமுட் கலந்து படிந்து நீறணிந்து சங்கரன் விழிமணி தாங்கிக்
கனியுமன் புருவா யாறெழுத்தெண்ணிக் கந்தவேடிருமுன்பு வந்து. 5

நெய்முதலா னறியகுற டிரிஞ்சுகுழம் பிருக்க நிறையவாட்டி
மைதவிர்க்கு காந்திமஞ்சன மாட்டிக் கலைமருடு மணிப்பூணோடு
கொய்மலர்த்தா மஞ்சாத்தக் குளிர்நானமிவைபலவுங் கூற்றைக்காய்ந்த
வையனுரை யாகமத்தின் விதிப்படிக் குவளைநறு முத மாதியாக 6

வேறு.

திருமுன்பு நிவேதனஞ்செய் தீரெட்டு முகமணியற் றிப்பின் செய்யும்
பொருவிலருக்கிய முதலா யீரெட்டுக் கூந்த வென்மலர்த்தார் பூசைமுற்றுங்
காவிலன் பினுடன் புரிந்து தொண்டர் சமஸ்திராங் கிர்த்தக் கழிய காணி
லருளுருவாயமுனை தத்தையென் றஞ்சலித்துத் துதிக்கின்றான் பின்னும்

வேறு.

மூவர்கண் முதல்வனை முக்கணன் குமரவேள் போற்றி
காவியங் கருங்கட் செவ்வாய்க் கவுரிதன் மைந்த போற்றி
பூவியேன் பிழைபொறுத்தாட் பணிக்கொள்ள வந்தாய் போற்றிப்
தேவர்க்கிடர் போக்கி சேவற் கொடிச் செல்வ போற்றி 8

மன்னுமாதவ னைச்செலவிடுத்துமெய் மகிழ்ந்துவீரர்களோடுந் தன்னதிச்சையா யாடல்செய்திருந்தனன் தடவரை நெடுங்கானில். 15

அகத்தியமுனி பூசைச்சருக்கம், முற்றிற்று.

ஆ விருத்தம். 149.

---

## அநுமன் பூசைச் சருக்கம்.

வாரிவரப்பக் கிரிபுருவ வடிவேல்விடுத்தோன் றிருவடியின்
வாரியயின்றோ னருச்சித்து வழுத்துமாறு சிறிதுரைத்தேம்
வாரிதுயின்மே னேவலினுன் மலர்மான்சனகி தனைத்தேட
வாரிகடந்தோன் குகனடியின் மலரிட்டருச்சிப் பதுசொலுவாம்

அந்தமேருக் கொடுமுடிக ளதிரப்பிடுங்கித் திசையதனுற்
சிந்த வெறியும் வலிபடைத்த திறல்சேர்வாயுச்சிவ னருளாற்
றந்த மதலை குகனைநெஞ்சிற் றரிக்குமறிவன் பொரவெதிர்த்து
வந்தவவுணர் காலனனு மானென்றுரைக்கும் வயவீரன். 2

வேறு.

மாதவஞ்செய்யச் சிந்தையினுன்னி வளம்பெறு காசியில் வந்து, மேதகு கங்கை நதியினிற் றோய்ந்து மெய்ம்மையாம் வெண்பொடி யணிந்தங், கோதரு மெழுத்தஞ் செண்ணிவானளவு மோங்கிய பனிவரை மகடன், காதலனுயகனைப்பூசனைசெய்துட் கனிவொடு துதித்தினி திறைஞ்சி. 3

ஆலயவலமாய்ச் சூழ்வருபோதி லருமறைமுடிவெலாந் தெளிந்த, சீலமாதவனும் வியாதனுக்குறலுந் தெரிந்துமா முக மணன்கியம்பிக், காலமோர்மூன்றுந் தெரிந்திடுமுனிவ கருதருந்தவஞ் செயக் கடல்சூழ், ஞாலமேற்புனித தலமுறையென்ன நான் மறைமுனிவர னவிலும். 4

பரிதிதன்னிடத்தி லரியதாங்கலைகள் பயின்றிடு மனுமகே னெஞ்சிற், கருதியவரங்கள் விரைவினிலீந்து கதிதரு மொருதலமதனிற், கருதியுந் தொடரா வெம்பிரான்றனக்குத் தூயமாமறைப்பொருளுரைத்த, குருபரனைவள்ளிலேநெடுவேற் கொற்றவனினிதுவீற் றிருக்கும், 5

சிவன்மலையதன்பே ரக்கிரியிடத்திற் சென்றுவானவர்த
மைக் காக்க, வுவரிநஞ் சயின்ற நீலகந்தரத்தி னொருவனைப்ப
திட்டைசெய்து வப்பின், கவளமாகளிற்று முகன்பினாருதித்த
கந்தவேடனையுமர்ச்சிக்கிற், பலமுழுதகற்றி வரம்பல பெற்றுப்
பாசமோ சனஞ்செயலாமால். 6

அன்னமாதலத்தி னறுமுகத்தவனை யருச்சனைபுரியிலிவ்
வகிலந், தன்னிடைப்புரித தலந்தொறுமுறையுஞ் சமபுவையு
மையையங் கரனை, யின்னயிற்கரனைச் சிவாகமநூலின் விதி
வழிவழாமன்மெய் யன்பின், பன்னருமுகம னுடனருச்சனைகள்
யன்னிய பயன்தரு மாதோ. 7

வேறு.

தெக்கணதி சைக்கணது செம்பொனுரு வாகு
மக்கிரிவ ராககிரி யானதின் வடக்கு
முக்கணன் விருப்பொடு முடிக்குநதிநேரா
மிக்கபுனி யோர்புகழ் காவேரிநதித்தெற்கு. 8

ஆதிசிவன் பட்டிமுனி யன்பினொடு காணப்
போதியிடை தாண்டவம் புந்தநகர்க் கீழ்பால்
கோதில்பசு வுக்குநிலைகூட்டுபதி யென்ன
மேதினிசொல் வஞ்சிநகர் மேற்றிசைய தாகும். 9

வேறு.

கூறு மந்தச் சிவமெனுங் குன்றந்தான்
மாறிலாவண்ட மட்டுமுயர்தலால்
ஆறுசேர்சடை யான்சிவலோகத்துக்
கேறநாட்டிய வேணிநிகர்க்குமால். 10

எனவிவையெனது குரவனும் வியாத னிசைத்திடமாருதி
வினவி, மனமகிழ்ந்தெழுந்து நருமதை நதியின் வந்ததி னியதி
யிற்படிந்து, புனலிடைசயம்பு வாய்முளைத்தெழுந்த புனிதமாமி
லிங்கமொன் றெடுத்து, தினகரனூருந் தேரினைத் தடைசெய்
சிவன்மலைச் சாரலின்வந்து. 11

வேறு

மண்கிழித்தும் புவிசெழிக்க வருங்காஞ்சி நதியாடி
விண்கிழித்தும் புறத்தினெழு மேருமுடிச் சிவமலையைக்
கண்குளிரக் கண்டுதடக் கரங்குவித்தக் கிரியின்மிசை
யண்களிக்குஞ் சுருதிவழிப் படியிலிங்கப் பதிட்டைசெய்து 12

பூத்திரள்கொண் டருச்சித்துப் புனலாட்டிச் சாந்தமுதற்
சாத்தியமு தாளிவே தனஞ்செய்து தாழ்ந்து துதித்
தேத்திவலஞ் சூழ்வருபோ திரவிகிர ணம்புகுதா
வாத்திநிழ லிளிதுறையு மருட்குமர னுருவுகண்டான். 13

வேறு.

கண்டவுடன் றாழ்ந்தெழுந்து கற்பகப்பூங்கா நிகர்த்த கர
ங்கள்கூப்பி, விண்டமொழி தழுதழுப்ப வுடல்முழுதும் புளக
முற விழிநீர்சோரப், பண்டொருகா லந்தனினு மறியாவற்
புதம்பெருகப் பகர் பேரின்பத், தெண்டிரைவா ரிதியினிடை
மூழ்கியருவுருவுருவாஞ் செய்கைதாங்கி. 14

தன்னையறியாதுமகிழ் தலைசிறப்பக் கூத்தாடித் தட்டமி
ட்டுப், பின்னரவன் றிருவடியினருச்சனைசெய் தினியமுத்திபெ
றச்சித்தத்தின், உன்னருங்கற்பகப்பூவி னலர்கொடுவந் தருச்
சனைசெய் துயர்வான்கங்கை, யின்னறுமென்புனலாட்டித் தூசு
ஞ்சந்தமலர்மாலை யிவையுஞ்சாத்தி. 15

வானமுதை யிகழ்ந்ததிரு வமுதமுதற் சிற்றுண்டி வகை
யாகிய, மானமிலே தனம்பண்ணி யிடையிடையா சமனீக்கிய
மாதியீந்து, நாலங்கொண் முகமணி யெட்டிடனை மாபூசைது
வன்றிச்செய்து, தேனொழுகு கடம்பணியுஞ் சேத்தனடி தாழ்
ந்து துதி செய்பனுற்றான். 16

வேறு.

திரவாரி திடர்ப்பட வோர்சொடு
காவேரொடு காங்கய னேச்சரணம்
அரவானந்த மெய்ச்சுனி பாயுணிலோ
ராவா சரணங் குமாரசரணம். 17

மூட்டாமறை யோனை முனிந்துவிலங்—கிட்டாய்சரண மி
றைவா சரணம், மட்டார்குழல் வாரண மாதுதனந், தொட்டா
டிய மாசுகனே சரணம். 18

திருமாலயு னிந்திரன் மாதவர்சொல்—பொருளாகிய வற்
புதனே சரணம், அருளாலிம வெற்பர சன்மகளாம்—வருமாது
மை கண்மணி யேசரணம். 19

வேறு.

என்றுதுதித் திறைஞ்சிநிற்கு மனுமன்முனந் தோகைமயி
லேறிவானோர், குன்றெறிவேற் படைதாங்கி கருணையே திருவுரு
வாங் குமரன்றோன்றி, வனறிறல்சேர் மாருதிநீ செய்திடுமபூ
சனை கண்டு மகிழ்ந்தோம வேண்டும், நன்றுவரங் கேளெனவு
மஞ்சனைபுத் திரண்டாழ்ந்து நவிலுற்றான். 20

வேறு.

பிரசமா மலரின்மேய பிரமன்மா லின்னங் காணாப்
பரமனற் குரவனின்பொற் பதத்திலர்ச் சனைசெய் தன்பி
னிரவொடு பகனுநீங்கா தேவல்செய் துய்யு மிந்த
வரமரு ளடியேற் கென்ன வள்ளலுங் கருணைகூர்ந்து. 2

வேறு.

அருகதனில் வருதியெனப் புறந்தடவி கனகன்வலி யட
கத் தூணில், வருமடங்கலேற் றினிகர் புயவலியும் பெறுதியென
வரமுநல்கிப், பொருவருவா னதிநீருந் தருமலருங் கொணர்ந்து
நம்மைப் பூசைசெய்திங், கிருபின்முத்தி யுந்தருது மெனறுதன
துருவினிடை யிற்புக்கானவ். 22

எந்தைபிரான் கருணைகொடு கொடுத்தவரம் பெற்றவன்று
னியம்புவண்ணஞ், சந்ததமுந்தப்பாமல் வானுலகிற பாய்ந்து
நறுந்தருப் பூக்கொய்தங், கந்தாகங் கையுங்கொணர்ந்து குகனு
டன்சங்கானையர்ச்சித் தங்குதன்பேர், வநதிடவோர் புனற்றட
ங்கண் டினிதுசிவ மலையினிடை வசிக்குநாளில் 23

கரசினியெலாஞ் சூழ்ந்து யாழில்வல்ல நாரதன்றெக் கண
த்தைநோக்கி, மாசுதவிர்த் திடுகாசி கேதாரங் காஞ்சியண்ணா
மலைவெண்காட்டு, டேசமுனி பதஞ்சலிக்காப் பரமனிடங் கா

ட்டுசெம்பொற் றில்லையாதி, தேசுபுகழ்த் தலங்களெல்லாங் கண்டிறைஞ்சி யொப்பில்சிவ வெற்பில் வந்தான். 24

குடமுனிக்காத் திருவுருவங் கொண்டுவந்த சேய்தனையுங் குன்றந்தந்த, மடமயிலை யொருபாகம் வைத்தபிரான் றனையும் வழிவரய்ப்பக்கண்டு, தடமலர்க்கை யிணைகூப்பி நிலமிசையெ ட்டுருப்புறதற் றாழ்ந்தெழுந்து, திடமனத்தனுங்கின்றுதரிசிக் குமபோதனுமன் சேணிற்பாயந்து. 25

கற்பகநன் மலரொடுவிண் கங்கையுங்கொண் டண்ணல் குகன் கமலத்தாளில். அற்புடனன் னீராட்டித் திருமலரா லருச்சனைசெய் ததனைக்காணுஉ, மற்புயமா ருதியையுமிகப்புகழ்ந்து முக மன்புகன்று வானினுற்ற, பொற்புறுநன் மலரிங்கு வந்த தெவ்வா றெனமுனிவன் புகறலோடும். 26

வஞ்சகக்கம பத்துடையோன் காமுழுது மொருகொடியில் வன்னிக்கிந்த, வஞ்சனைதன் மகன் புகல்வான் யாற்முனிவ குர்க் கிளைகளனைத்தும் வீட்டிக், கஞ்சமலர்க் கண்ணனயனிந்திரன்வா னோர் முனிவர் கவலைதீயிற், பஞ்செனச்செ யெந்தைதனக் கரிய தோகற் பகப்பூ பகர்தி யென்றான். 27

மாருதிசொல் வினவியயாழ் முனிவானுஞ் சத்திசிவ மலையி னீங்கிச், சீருலவும் பொன்னுலகிற் சென்றனனிந் திரனவன் சொல் செய்திகேட்டுப், பாருலகில் வந்து குகனடியிலருச் சனை புரிந்த பரிசுபின்ன, ராருமறி யப்புகல்வாம் வாயுமகனறு முகன் பொன்னடி நீங்காமல். 28

பத்தியுடனிம்முறையாய் நெடுநாளர்ச் சனைபுரிந்து பரமன் யாகம், வைத்தவுமை தருமதலை தாளிணையிற் பணிந்து நின்னை மறவாவன்பர்க், கொத்தமுத்தி யெனக்கருள வேண்டுமெனப் புகன்றிடனு மும்பர் போற்றும், வித்தகனுகிய குமரன் மாருதி யை நோக்கி யிவை விளம்புவானுல். 29

நவிலரிய பல்கோடி யுகங்கண்டு வேண்டுவரநனிகள் பெற்றுப், புவியினும்ப ருலகினிக ரெவருமின்றி மேருகிரிப் புறத்தி லேகித், தவவடிவி னிருதியங்கண் வருதியாம் பின்னர்முத்தி தருது மென்னச், சிவன்மதலை விடைகொடுக்க வவன் பணித்த மொழி மனத்துஞ் சிரத்துந்தாங்கி. 30

மத்தகய முனிவன்பின் வந்தபிரா னடிநாளும் வணக்கஞ்
செய்யச், சத்திசிவ மலைப்பிரியப் பொருந்தாமற் றனதுசத்தி
தன்னிற்பாதி, எத்தலமு மிணையில்சிவாலை நிறீஇ விண்ணெ
றியா யிலகுமேரு, அத்திரிபான் வடபாலி லினிதுசென் றங்கிரு
ந்தனனுலநுமன்றனே. 31

அநுமன் பூசைச் சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம், 180.

---

## இந்திரன் பூசைச் சருக்கம்.

வேறு.

மந்தி ராசலம் பொருபுயமாருதி வந்து
புந்தியார்வமோ டருச்சனை புரிதரம் புகன்று
மிந்தி ரன்குக னோடமராதிய வேதஞ்
சிந்த வங்குவந் தருச்சனை செய்திற மிசைப்பாம். 1

அண்டமாயிரத் தெட்டினிற் செலுத்தா சாண்மை
கொண்ட சூரபன் மன்செயுங் கொடுமைகண் டஞ்சி
விண்டலததவர் யாவரும் மேருமால் வரையி
னெண்டி சாமுக முனிவரு மொருங்கமர்ந் திருந்தார். 2

அந்த நாள்வயி னொருபகன் மலைமக ளருள்சேய்
விந்தை யாடலை மதித்தொரு முகமதாய் மேவி
கந்த மாதனத் திருந்துதன் னிச்சையாற் ககனார்
விந்த மாதிய பொருப்பெலாம் வேரொடு மகிழ்ந்து. 3

தண்ணு மால்வரைச் சிகரங்க ளிலமுற நாட்டிக்
கண்ண கன்றபாற் கடலினை யுவர்க்கட லாக்கி
எண்ணு மற்றய கடலையும் வேறதா வியற்றி
விண்ணின் மீன்களை முறைபிறழ்ந் திடும்படி விடுத்து. 4

மன்னு திக்கயந் தனைத்திசை மாறிட மறித்துப்
பன்ன கங்களெட் டினையுமோர் திக்குறப் படுத்துப்
பொன்னி நாட்டுள தருக்களைப் புவியிடைப் பொருத்தி
இன்ன வாறெம்பி ரான்விளையாடல்செய் திருந்தான். 5

தேனவிழ்த்திடு கடம்பணி தடம்புயச் செவ்வே
ளானவன் செய்யு மாடலி தென்றறியாமற்

றானவர்புரி மாயமுஞ் சதியெனை மதித்து
வானவர் சுத மகமெனுஞ் சினத்தொடும் வந்தார் 6

நாடி யீங்கிவை புரிந்தவர் யாரென நண்ணித்
தேடி னரெவர் தடமையுங் கண்டிலர் திகைத்து
வாடி நின்றிடுங் காலையின் மதலையாய் வந்தங்
காடல் செய்திடு குமாரனைக் கண்டன ரமரர். 7

மாய வஞ்சக வல்லனு மசுரனீங் கிவனான்
சேயனுப்படி மழவுருத் தாங்கியிச் செய்கை
யேயெ னாந்துணைக் குள்ளினி தியற்றின னென்னுக்
காயும் வெஞ்சமர் தொடங்கினன் குமரன்மேற் கண்ணன். 8

விசய மாமழுத் தோமரஞ் சக்கிரம் வேல்வாள்
தசைமணங்கமழ் முத்தலைப் படைகொடு சரங்கள்
திசையெ லாஞ்சுடு தீப்படை புனற்படை திகாந்த
மசைய வண்டிடு மாதரும் படைமுதலனைத்தும். 9

குகலை மெனமொழி தெளிகிலா மழவுருக் கொண்ட
மதலை மேலவிடுத் தார்தன ரவைவந்து மலைமான்
றிதலை பூததொளிர் திருமுலைப் பாலயில் சேய்தாள்
அதனை முமமுறை சூழ்ந்துபின் போயின தன்றே. 10

தொட்ட பற்பல படையெலா மதலைதன் றுணைத்தாட்
கிட்டி வந்தனை செய்தல்கண் டிந்திரன் கிளர்தோட்
டட்டி யாலமுண் டானலன் கவுத்துவந் தன்னை
யிட்ட மாயினன் றானலனயனல னின்னும் 11

தக்கன்மா மகம பொடிபெழத் தேவர் மாதவர்கள்
திக்கெலாமிரிந் தோடிடத் தடிந்தருள் செய்யு
மிக்கவீரபத் திரனலன் சிவனுடன் மேவுஞ்
சக்கரக்கர னுதவிய தனயனு மல்லன். 12

வீரமிஞ்சிய வவுணருக் கிறைவனும் வெய்ய
சூரபன்மனு தானல னுயிர்நந் துணைக்கைப்
பாரகேசரிமுகனலன் மாயவன் படையெய்
யாரமாயனி தாரக வீரனு மல்லன் 13

மற்றுள்ளார்வலி நமக்கிணையோ வென மதித்துக்
கொற்றவச்சிரந் தனையெடுத் தெதிராதாய்க் குருகி
பற்றலார் புரம் பொடியெழ நகைத்தவன் பாலன்
மற்றடப்புய வரையின்மே லெறிந்தனன் மாதோ. 14

துங்க வச்சிரப் படைவந்து திருவடி தொழுமுன்
கங்கை மைந்தனோர் கார்முகங் குனித்தொரு கணையா
லங்கெதிர்த்திடு மிந்திரன் முதலிய வமரர்
தங்கள் சென்னியும் புயங்களுந் துணிந்திடத் தடிந்தான். 15

அண்டர் கோன்முத லமரர்க ளியாவரு மமரிற்
கண்ட துண்டமாய் வீழ்ந்தனர் பொன்னவன் கண்டு
சண்டமாருத வேகமாய் வந்துமை தருசேய்
முண்டகப பதந் தொழுதுமுன் னின்றிவை மொழிவான். 16

மாயை தந்திடு சூரபன்மன்னெனு மவுண
னேயு மண்டங்க ளாயிரத் தெட்டினுக் கிறைபூண்
டேய புன்றொழில் செய்வித்த தனறியுஞ் செருக்காற்
றாய கற்புடைச் சசிபுயந் தோய்ந்திட நினைந்தான். 17

அன்ன வாறுகண் டிந்திரன் சசியுட னகன்று
பொன்னின் மேருவி னமரர்கள் சிலரொடும் போனான்
பின்ன ரிந்திரன் றருமகன் சயந்தனும் பெயரோன்
மன்னும் வானவர் பலரொடு மும்பரில் வதிந்தான். 18

வெள்ள மாயிரஞ் சேனையோ டருக்கனை வெருண்டோன்
கள்ள விழ்ந்தபூங் கற்பக நாட்டிடைச் சென்று
கொள்ளை யிட்டெரி யூட்டியிந் திரன்றரு குமரன்
றள்ளருந்திறற் சயந்தனென் றொருபெயர் தரித்தோன். 19

•அத்தனிப்பெருஞ் செல்வனை யமரரைப்பற்றி
மெய்த்துணைக்கர முதுகுறக் கயறொடு லீக்கி
அத்தி நாளுறு வீர மாயேந்திரத்தடைந்து
சித்த நோகுற வல்லியிட் டருஞ்சிறை செய்தான். 20

என்று யோகுநீத் தெம்பிரா னிமயமா மயிலை
என்று நன்மணம் புணர்ந்தவ னிடங்கலந் தின்புற்

கேதவாரியை யுண்டிடு வடவைபோற் றிரண
மோத வந்ததாம் நினதுடன் யாம்பொரு முயல்வித்.
தீதெலாம்பொறுத் தின்னருள் புரிகெனச் சிவந்த
பாத பங்கய முடியுறப் பின்னரும் பணிந்தார் 29

சரண் பணிந்திடு புங்கவர் தங்களிலிறையாம்
புரந்த ரன்றனைப் பார்த்திவை புகலுவான் சூரன்
வரங்குலைந்திட வவன்குல முழுவதும் வாட்டி
நிரந்தரந்தரு நீங்கிடா நின்னக ரரசு. 30

தருதும் வானவர் தம்மொடு மேருவிற் சார்ந்தங்
கிருவெனப்பெரு விடைகொடுத் திந்திர னரிய
இருவிருக்கும்விண் ணாட்டவர் தங்களுக் காமோர்
திருமுகத்துட னுடல்செயறுமுகச் செம்மல். 31

வேறு.

அம்பொன்மால் வரைக்கு முருகையன் விடைபெற்றெழும்
போதவ் வமரர் கோன்பொன், செம்பதும முகநோக்கிப் பனி
வரைமா தவத்தில்வந்த செல்விதந்த, வெம்பெருமா னென்றறி
யா தமர்பொருதி வச்சிரங்கொண் டெறிந்த பார,வெம்பிழை தீர்
ந்திடும்படிக்கு விளம்புகென வந்தணனும் விளம்புவானால். 32

வேறு.

பரத கண்டத்திற் றெக்கண திசையினற் பகலை
யிரவு செய்தவன் றனைச்சிவன் செய்துநின் றிறைஞ்சுந்
திரம காதவன் கொடுவரு காவிரித் தென்சார்
தரணி யேழ்புகழ் சிவமலை யென்றொரு சயிலம். 33

அந்தமால்வரை யுச்சியி னறுமுகத் தமலன்
சந்த தங்குடி யாயிருந் தருளுருத் தாங்கி
வந்திருந்தவர் தமக்கெலாம் நல்வரம் வழங்கு
மிந்த முப்புவ னத்தினு மதற்கிணை யிலதால். 34

கயிலை தன்னினுங் கந்தமா தனத்தினுங் கரிய
புயல் கிழித்தெழு திருத்தணி தன்னினும் புவியிற்
புகினு மற்றுள பொருப்புக டன்னினும் பலகவே.
மயிலவன் விருப்பாக்கவீற் றிருக்குமவ் வடுக்கல். 35

ஆசிலக்கிரி தனிற்சென்று வேற்படை யவனைப்
பூசை செய்திடுற செயபிழை பொறுப்பதை யன்றி
நாச மென்றுமில் பெருவரம வேணடுவ நல்கிப்
பேசருந்தனி முத்தியு முதவுவன் பின்னர். 36

என்று பொனனவ னியம்பலு மகபதியிசைப்பா
னன்று சொற்றனை யையவமமலை பொனனி நதிப்பா
லொனறு மெனறிடிற் றெக்கணத்துவரியி லோஙகும்
வெனறி வீரமா மயேநதிர ஞாஙகரின் மேவும. 37

துங்க மிகுயா சூரபன் மன்றமர் சூழ்நது
சிங்க வேறெனப் பறபல கோடியாக திரிவா
ராக னெயதியா மறுமுநத தமலனை யன்பிற்
பொஙகு பூசனை புரிவதெவ வாறெனப புகன்றார். 38

வேறு

ஆதலாற சிவ வெறபி னுறுகியே
போத மூா கதியைப பூசை புரிநதிட
நது காலம தலலவினிச சில
போது தனனிற புராரி குமரனுல். 39

வேறு

மட்டிலாபபெறு வரம்பெறு சூரன்வாழ்வன்றி
னட்டின மேலுமா யிரவண்ட மீதினிலிருக்கும்
படட தானவர் கிளையெலா மொருங்குபட் டிடுநாள்
கிட்டவந்தது வஞசக ரொழிநதபின் கேளியாம். 40

அரந்தை தீர்த்தருள் சிவாசல மெனும்வரை யதிற்சென்
றுரந்த வாதவேற் படையவனடி யிலன் புகந்து
திரந்த ரும்படி பூசனை செய்குவ மென்னப்
புரந்த ரற்குமெய்ப் புளகுறப் பொன்னவன் புகன்றான். 41

இனிதுரைத்தனை யையநீ யென்றுவா னவர்கோன்
புனிதன் முப்புரம் பொடித்திட வுரகநாண்பூட்டிக்
குனிவி லாச்செயுங் குன்றிடை யமரர்தங் குழுவுந்
துனியமைச்சனு முடனுறச் சார்ந்தினி திருந்தான். 42

வேறு.

இன்ன வாறிவ ரிருக்குமற் றவுணர்க ளெவர்க்கு
மன்னர் மன்னனுஞ் சூரபன் மன்னெனும் வலியோன்
தன்ன தாணையாற் சயந்தனு தியசுரர் தம்மை
இன்ன லாத்தமு மவுணர்க ளியற்றுதல் வினவி. 43

கநக வேடனை விழியினுற் கருணையாற் றந்த
தந்தை யான்மதுத துளித்திடு சலசமீ திருக்கு
மாதுணை றிரு மாலவ னிந்திரனமரர்
வந்து வெள்ளியங் கிரியயின் முக்கண்வா னவனை 44

பரவி நிற்றலு மெந்தைமான் முகமலர்ப்பார்த்து
வருக வென்றுரை செய்தன மலரவர்ப்பார்த்துச்
சிரம சைத்தனன் புரந்தரற் கெதிர்நகை செய்தான்
விரவு வானவர் தமையெலாம் நோக்கினன் விழியால் 45

இன்ன தன்மையா யாவர்க்கு மினிதருள் சுரந்த
பொன்னின் வார்சடைப் புண்ணியப் புனிதனை நோக்கி
அன்ன வாகனன் பாகசா தனனுடனமரா
பன்ன கத்தின்மேற் றுயில்பவன் யாவரும் பகர்வார்

இடியை நேர்தரு சொற்பகர் தானவர்க் கிறையாங்
கொடிய சூரபன்மன் செயுங் கொடுமைகள் கூற
முடிவு றுதினி யாகிலுங் காத்தருண் முக்க
ணடிக ளென்றலு மஞ்சலீ ரெனப்பகர்ந் தமலன் 47

வேறு.

கருணையே திருவுருவாய்க் கண்ணுதலி லுதித்தருளுங் கந்தவேளை, யருகழைத்துக் குறங்கிருத்தி புறந்தடவி யுச்சிமோந் தன்பினேக்கிப், பொருவினைமைந்த சேட்டி தன்பால் வீரமயேந்திரமென்னும் புரத்துள்வைகும், அருள்சிறிது மில்லாத சூர்க்கிளைகளெனச் சொல்வ தனைத்தும்விட்டி. 48

தேவர்சிறை விடுத்துமக பதிக்கினைய பொன்னுலகாள் சிறப்புநல்கிப், பூவுறைமேலோன் முதலெல்வரும பொருந்தாசினியவின் முறை புரியச்செய்து, வாவிரைவி னெனவுரைத் தீராயிரம்வென்

ளம்பூத வடவைத்தீயைத், தாவியவித்திறங்குண்டோ தான்முத லாம் படைத்தலைவர் சயிலமேராம். 49

உரமிருந்த புயவீர ரோரிலக்கத் தொன்பதின் மருலகமு ண்டோ, வரவிந்த மலரவனிந் திரன்வானோ ரிவ்வனிக மனைத்து ங்கூட்டி, இரதகயதுரகமுந் தந்திணையிலாப் படைக்கலமு மினிது நல்கிப், பரமன்விடை கொடுத்தருள வப்படியே யெந்தைதென் பாற் பாரில்வந்து. 50

தானவர்கள் கிளைமுழுதுந் தொலைத்துமக பதிமைந்தன் சயந்தன் விண்ணோ, ரானவர்தஞ் சிறைநீக்கிப் பரங்குன்றில் வந்து தெய்வயானை தன்னை, மேன்மைபெறு மணம்புரிந்து பொன்னு லகா ளிறைமைசுரர் வேந்தற்கீந்து, வானவர் சேனாதிபதியாங் குமரநாயகன் கயிலை மன்னும் பின்னர். 51

கற்பகப்பூ நறியமணங் கவர்ந்து வந்து தென்வசந்தக் கால் கள்வீச, விற்புருவ வரமகளிர் சித்திரப்பா வையினடிப்ப விண் ணோ ரேத்தக், கற்பனை யாழ்வல்லோர்க ளிசைவிரவத் துந்து பிகள் கல்லென்றார்ப்ப, பொற்புமிகும் வெள்ளிமலை போன்ற வெள் வாரணப்பிடரிப் போந்துலாவும். 52

மிக்கசெல்வச் செருக்கானுஞ் செப்பைவென் றண்ணாந் தெழுந்து விம்முகொங்கை, மைக்குழலிந் திராணி யின்ப வாரிதி யிற்றோய் காதன் மயக்கத்தானு, மக்கயிலை நிகர்த்த சிவாசலத் தெய்தி யெந்தைபிரானடியிற் பூசை, பொய்க்கிரம மாய்ப்புரிவோ மெனவிருந்த நினைவயர்ந்தான் விண்ணோர் வேந்தன். 53

அங்கதனன் மருட்கைமெய்சிக் கானலைதெண்ணீரெனவே யலைமான்போலப், பைங்கனக மண்டபத்தி லமைத்த சித்திரப் பொற்பாவை யெல்லாந், திங்கண்முகச் சசிபோற்கண்டின்பநல மன்புடனே நினைகவெற்பாந், துங்கமணிப் புயத்தணைக்கக் கையுறுவாறதனாற் றுயரம பூண்டும். 54

செப்புமுலை யயிராணி சேரவந்தா ளீயெவடான் செப்பு கென்று, மொப்பரிய சயந்தனுந்றாலார்மகளீ யேதுக்கிங் குற்று யென்று, மிப்படிநன் மதிமாறு பட்டுமக பதியந்தி யிருக்குங்

காலை, எப்புவியுங் கண்டுவரு மியாழில வல்ல நாரதனங் கெய்
தினானல். 55

இந்திரனைக் கற்பகக்கா விடையினிற்கண் டாசிமொழிபி
யம்பவன்று, னந்தமுனிவரனை முன்போலேத்தி முகமன்புகலா
தார்நீ யிங்கு, வந்ததெனை யிக்குநில்லாதே கெனவும் புகலவிந்த
மகவானுக்குச்,சிந்தைகலங்கிய தென்னென்றையுற்றுச் சசிமருங்
கிற் சென்றான் மன்றோ 56

இந்த முனிதனைச்சசி கண்டஞ்சலிசெய் தினியமுக மன்ப
ல்கூறி,யந்தவிசின் மீதிருத்தி யெப்புவியின் மீதிநந்திங் கடை
ந்தாயென்னச், சந்தமலருங் கூந்தற் சிற்றிடைசேல் விழித்துவ
ர்வாய் கனியினின்சொற், குந்தநகை யயிராணி கேட்டிட நார
தமுனிவன் கூறுவானால். 57

பூதலமெலாஞ் சூழ்ந்து வந்தனனுங் கொருபுதுமை புகலக்
கேண்மூன், சீதரன் பூவுலகாவு காணவுருக் கொண்டதெனத்
தென்பார் தோன்று, மேதகுசிவாசல மென்றொருமலையங் குளத
தன்மேல் வெற்புஞ் சூருங்,காகயில் வேற்படைதாங்குங்கர்தனினி
திருக்கின்றான் கருணைகூர்ந்து. 58

சித்தர்முனி வோரியக்கர் கின்னரர் மாலயன்முதலாந் தே
வர்யாரும், நித்தமகலாது குகனடியி லருச்சனைபுரிவார் நியமத்
தோடு, மத்தகைய மாதவத்தி லஞ்சனைமா தருளியசே யனுமா
னென்போன், இத்தலத்துத் தருமலரு மந்தாரகங் கையுங்கொடு
வந்திணை யிலாத 59

ஆறுமா முகத்தவனைப்பூசைசெய்து மலரவனேயாகிச்சிறி,
மாறுதா யெதிர்த்த பகைவரைத்தடியக் கனகனுயிர் வாட்டும்
யாளி, யேறுமாவலியு மின்னும் வேண்டுமினி தாம் வரங்கள் யா
வும் பெற்றான், வேரியாமுரைப்பதென்னை யிந்திரனச் சிவசயில
மீதிற்சென்று. 60

கஞ்சனையஞ் சப்புடைக்குங் கரகமலக் குக்கன்பதத்தைக்
கண்டாற்றீயிற், பஞ்சனைவே பாதகங்களொழிந்து மனத்தெண்
ணும்வரம் பலிக்குமென்னத்,தஞ்சமென்றோர் தமைக்காக்குந்தக்

கவனுங் கவலையன்றித் தானின்றென்ன, விஞ்செனுரைத் தியாழ் முனிவன் றிசைமுகத்தோனுலகினிடை யேகினனால். 61

நாரதனவ் வுரைபகர்ந்து போயபின்னா புரந்தரன்யானைறைமென் கூந்தற், கூரயில்வேல் விழிச்சசி சென்றாளை செய்வாணமனை யன்புகூர்ந்து காத்த, தாரணி யீராறு புயச் சண்முகவேள் பூமி யிலம் பரத்தைத் தாண்டும், பாரமகா மேருநிகர் சிவமலையென் றொருநாமம் படைத்த வெற்பின். 62

உச்சிதன்னி லிருந்துதன்னைத் தரிசித்தோர் புகுந்தோ ருள்ளந்தன்னின், இச்சையுடனினைந்திடுவோர் தமக்கினிய வேண்டுவர மெல்லாந்தந்து, பச்சைவண்ண னறியாத பாதமலருந் தருவனெனப் பகர்ந்தான்வீணை, விச்சாசமுனிவரனீது நிச் சயமென்றே பரிவின் விளம்பலோடும். 63

சிவமலை யென்றுரைத்திடுசொற் செவிபுகுமுன் மருணீக்கித் தெளிவுவந்து, பவளவிதழ்த்தவளநகைப் பான்மொழியாயி கை தந்தபாலனருள், முவமையிலான் றன்னுடன்யா னுடன்று சமர்புரிந்தபிழையொழியப் பூசை, யவனையன்பிற்செய்வமது குரவனன்று ளுரைத்த தலமவனிதன்னில். 64

மேதகு சீர்சிவாசலத்தினைப்பொழுதி னெய்துதற்கு, விறற் கூரென்னும், பாககன்றன் றுணைவெள்ளம் பரவியதன் றூறு மற் படிறனிற்று, மேதினிவிட்டகன்ற பின்னர் பணிவமென விருந்தவெண்ணம் மயர்ந்துமிக்க, சீதமதிமுக மடவார் மையலி னுஞ் செல்வமென்னும் செருக்கிலாழ்ந்து. 65

இத்தனைநாள் தானுமெந்தை யிணையடியைப் போற்றுமெ றிருந்தேனந்தோ, உத்தமவானோரிடத்துங் கலைபேசிதம் விளைத் துண்மையேயும், வித்தகநாரத முனிவன் செப்பிய சொலென்ன ளவின்மேலுள்மாயன், அத்திகடைந்தாரமுதந்தந்தவண்ண மான தெந்தை யருளினாலே. 66

என்னவுரைத் திகலயிரா வதத்திலிவர்ந் தமரர்தபுரமிரு பாற்சூழப், பொன்னுலகந்தனை நீத்தப்பூதத்தின் மீதினிற்சம் புத்தீவெய்தி. மன்னவர்தம் புரமெரித்த வரிசிலையாம் பொன் மேருவரையின்வந்த, மின்னவிருந் சிவன்மலையை யாயிரங்க ண்ணாற்கண்டு வியப்பமெய்தி. 67

உளர்ந்திபிறிந் தண்டமுக டுரிஞ்சிநிமிர் சிவன்மலையினுச்சி யெய்திக், கார்திகழு மணிகண்டன் றனையுமைவ னிடப்பாகங் கலந்துமேவும், பார்முழுதுந் தருமெங்களம்மையுமையவள் பதத்துங் பணிந்துவெய்ய, சூர்கிரிவா ரிதிகடிந்த மன்பர்குமரன் கழலைக்கரத்துச் சுடர்வேலுங்கும். 68

முருக வேளையுங்கண் டடிபணிந்து கரகமலமுடிமேற் கூப்பிக், கருணை திருவடிவா யெங்குடிமுழுதுங் காக்கவிந்தக் கடியகானத், திருமலையி லெழுந்தருளி வந்தனை யென்றுரோம மெலாஞ் சிலிர்ப்ப வன்பின், உருகியுடற் கண்களெலாம் புனல் பெருக மனமொருமித் துவப்பினோடும். 69

கற்பகப்பூ நறியசருக் கரைதேன் மஞ்சனமினநீர் கன்னற் சாறு, பொற்பமை தண்டாமிரெண்ணெய் வானமுத மான்றரு நெய் புதியதீம்பால், பற்பல வாங்கனிவருக்க நானஞ் சந்தனம் புழுகுபசிய மஞ்சள், விற்புருகப் புரமாதி வெள்முப காரமெலாம் விண்ணோர் நல்க. 79

எண்ணிரண்டா முகமனொடுங் குகனடியிற் பூசனைசெய் திருடைரன்பி, னுண்ணிறையு மானந்த வெள்ளமுவட் டெடுத்து கத்தினுட்கொள்ளாம, கண்ணினிவெளிப் படுவதெனை விழிப்புனல் பாய்ந் துடல்முழுது நனைய மெய்ம்மயிர்ப், புண்ணியன் சன்னிதினின்று கரங்கூப்பி யினையதுதி புகல்வதானான். 71

வேறு.

வேத மந்திர வுருவமா மெய்ம்மையா சரணந்
காதவிழ்ந்திடு கடம்பணி தடப்புயா சரணம்
சீதரன் செருக் கடக்கிய சேவகா சரணம்
பூத நாயகன் குமரனும் புண்ணிய சரணம். 72

அடியரேஞ் செய்த கொடும்பிழையனைத்தையும் பொறுத்தெங்
குடியெலாப்புரந் தருளிய கொற்றவா சரணம்
நெடியவன் பிரமன்பணி நிருமலா சரணம்
படியிலோங்கிய சிவமலைப் பண்ணவா சரணம். 73

வேறு.

இன்னணந் துதிசெய் வானவர் கோன்முனெம்பிரான் மயின்மிசைத் தோன்றிப், பொன்னகர்க்கிறைவ வன்பொடு நீசெய் பூசனையுவந்தனம் வேண்டும், மன்னு நல்வரங்கள் கேளென மகவான் வணங்கியெங் குலக்குறை முழுதும், முன்னமே தவிர்த்தா யினி யெனக்குன்றாள முளரிதந்தருளெனச் சொல்வான்.

பன்னெடுங்காலம் பொன்னினாட்டிறையாய்ப் பற்பலபோகங்கடுய்க்கும, நன்னலமொழ் வெய்திய பகைதனை முருக்கி நமை மனத்துன்னியங் கிருத்தி, பின்னை யானந்த வீடியாந் தருதும் பெயர்ந்திடு நின்னகர்க் கெனனத், துன்னலர்க்கடந்த வேற் படைதாங்குந் தோன்றலங் குமரவேள் சொன்னான் 75

அருந்திறன் முருக னிம்முறை புகல வண்டர்கோன் சிவமலைதனைப, பிரிந்திடமனது பொருந்திடாதியல்பிற் பின்னரு மவ்விடை யெழுந்த,விருந்துதன் னுமமுலகினில் விளங்க விந்திர தீர்த்த மென்றன்பு, பொருந்திடக்கண்டு சுரருடன் சென்று பொன்னகர் புகுந்து வீற்றிருந்தான். 76

இந்திரன் அருச்சனைச் சருக்கம் முற்றிற்று,
ஆ விருத்தம், 256.

---

நகுடன் சாபந்தீர்த்த சருக்கம்.

வேறு.

காவின் மன்னவன் கந்த வேளெனும்
தேவர்க்குப் பணி செய்ததோதினும்
நாவினுற்பிழை நகுட மன்னவன்
சாவ நீங்கிய தன்மைச் சாற்றுவயாம். 1

மகிதலம்முழு தாளுமன்னவன்
நகுடனெனபமேதார் நாம வேவினன்
தகைமை மாகமந் தனிற்ச தஞ்செய்து
நகவில் போகமார் நாக நண்ணினான். 2

சுரர்கள் யாவருந் தொழுது சூழ்வரப்
பரமன்றனையே பத்தியாற்பக
லிரவினுந்தொழு மேழு மாதவர்
திரளெழின் மணிச் சிவிகை தாங்கவே. 3

வேறு.

இந்திரப்பட்டந்தரித்து வருநகுட னிந்திராணியின்ப மெய்த, வந்தவெழு முனிவரர்தம பெருமையை யிவ்வளவேனு மனத்தெண்ணாமல், இந்துமுகச் சசியிடத்தி லேகிடுமின் சர்ப்ப வென்று னிலைசையின் மிக்க. சந்தமுனி வெகுண்டவனைச் சர்ப்பமாகெனச்சபிக்கசசர்ப்பமாகி. 4

அந்தரத்தி னின்றுமிந்தப்பார்நோக்கித் தலைகீழ தாக வீழ்ந்து, நெருந்துடலம் பதைப்பநெடு முசசெறிந்து சதமகத்தி ஞெண்மை நீங்கி, யநதரவான் முகநெகிழித் தமராபதி யனைவரு மயர்ந தகன்றபார, விந்துகிரித தெனபாலிற காளநதித்தடவரை பால் வேய் சூழ்கானில. 5

சால நெடுங்கால முடன் மண்புரளக் கிடந்தன்னோர் தமி யனுகக், காலைதனிற றுருவாசன் கஙகைநதி யூழவரு காசிதன்னில், ஏலவொரு மாவிலிங்கப பதிட்டைசெய்து பூசனை செய் தேற்றிப் போற்றி, மாலவன் சஙகரனுன குறமுலபபதி காண வருகும்போது. 6

உரக வுருவாய்க் கிடக்கும் நகுடனென வறியாம லொரு கற்பாறை, சுரநெறியிற் கிடந்ததென மதிதது மதித்தேறவநதத் துருவாசன்றன், சரணமெய்யிற படுதலு நல்லறிவு வநதாங்க வன் மலர்த்தா டன்னைச்சூழ்ந்து, பரவிமுன்னு ளகத்தியனுற் றுன்பணியா முறையாவும் பகர்ந்து பின்னர். 7

எந்தையே யரவுருநீத்தினியானுய்ந்திடு வண்ண மியம்பு கென்னச், சிந்தையா குலத்துடனே மிகவினமபத் துருவாசன் செப்புவானமுன், விந்தமடக்கிய முனிவ னிட்டபெருஞ் சாபத்தை விலக்க வல்லா, ரெந்தவுல கத்துமிலை யெத்தேவா தம்மா லுமிதுதீராதால். 8

ஆயினுமெம் மனத்தினி லொன்றுதித்ததுகே ளிருந்தமிழ் நூலாரணங்கள், மேயசிவா கமமனைத்துங் குறமுனிவர்க்குரைத் தருள் செய் வேளமர்ந்தத், நாடென்ற னுலயத்தைச் சூழ்ந்து வல மாகவந்து துதித்து நின்று, லேயுமா வுருநீங்கிப் பரகதி யுங் கிடைத்திடுமென் றியம்பினைல். 9

அந்த வாசகம் வினவும் பணிந்துடன் முனிவனைப்பார்த் தையமைந்தக், கந்தவேளினிதுறை யுங்காரணமெய்த்தலமொன்று கழறுமென்னச், சிறைத்தவிற குகவுறையுந் தலமனைத்து மன த்திலெண்ணித் தெளிந்துபார, பந்த மறுத்திடு மெம்மான் புக ரணத்தி லிருந்தியல்பிற் பகர்வதானன். 10

வேறு.

வானவர் தனிற் சிறந்தோர் பணிகண்டனுடன் மூவர்
பான மன்னிற் பிறந்தோர் வழுதியுடனொரு மூவர்
மேன்மை சேர் நாவினர் தமின் மிகராக நந்தான் மன்றுடி
தானகன்ன னொருந்தடக்கைச் சருக்கரை மன்றுடிமன்னன் 11

பன்னரிய புகழ்படைந்த பல்லவராயக் குரிசி
லென்னவரு முரர்கருதியேரய வேளாளரும் வேன்
மன்னவர்க்குந் தொன்றுதொட்டு வழிவழியாயுமைமெய்ப்பா
ரன்னவர்கள் குலதெய்வ மாகிநிற்ப னெங்கோமான். 12

ஆங்கவர்களுடனொருவோ டாவியென வொருமூன்றுங்
காங்கேயன் றனக்கினிய காரணத்தா லுறுறையும
பாங்கு பெறுநதிருநாடு பார்மகட்குத் திலதமதாய்
ஓங்கு புகழ்க் காங்கேயநா டெனநாம முற்றதுவே. 13

வேறு

அகல்விசும் பினிற் கங்கையின் மாடமேலாகிய கொடி தோய்ந்து, பகலவன் கதிர் வெம்மையுங் குளிர்நனி படைத் திட மிகவிசுந், துசடவாந்திடு பாகம மங்கலமெய்ச் சுருதிநூல் புராணங்கள், புகழுமுத்தமி ழூந்தினமோங்கியே பொலியுமத் திருநாடு. 14

அந்த நாட்டினிற் சிவாசலந் தன்னிலெம் மாதுமா மூகந் தன்னால், சந்ததங்குடி யாயிருந் தடுத்தவர் தமக்கெலா மருளோடுந், சிந்தையுன்புற விந்திரச் செல்வமுஞ் சித்தியு நனி நல்கிப், பந்தபாசமு மறுத்தொன் றிகரிலா பரம முத்தியும் மீவான். 15

அந்த டங்கிரி தனிற்சென்று கடன்முழு தங்கையி னெடுத்தண்ட, வித்தகக்குறு முனிவரனாகிய மெய்த்தவன் முன்கண்ட, வுத்தமம் பெறுந் தடப்படிந்தணிந்த நீறுருத்திர வடந்தாங்கி, முத்தி தந்திடு மப்பெருவரையினை முப்முறை வலஞ் சூழ்ந்து. 16

திருமுன் றாழ்ந்து நின்றேத்திட நீபெருந் தீயதோர் பெருஞ்சாப, மொருவி முன்புபோ லயினா தானிமைபெற் றுயர்சிவ பதஞ்சேர்வை, யிருமையுந்தரு மத்தல மலதுவே றிலையொரு தலமென்னப், பெருமை மாதவன் மற்றதற் கேகெனப் பேசி யாங் கவன்சென்றான். 17

வேறு.

அரிபதரு வாசமுனி மொழிவினவி மனமுருகி யாங்கு நீங்கிப், பெரியவரையுங்காலும் பின்னுகளி விசையிற் பெயர்ந்து வந்து, கரியவிரிப் பசுந்தோகைக் கவுரியொரு பாகம்வைத்த கடவுண்மேனாள், தரியவர்கள் புரந்துலக்க வெடுத்தவில்லோன் வந்த சிவசயிலங்கண்டான். 18

பாவவினை வேறுக்குப் பரமசுக மருளவல்ல பான்மைத் தான, காவிரியிற் படிந்துநண்ணு நாககிரியுமை பாகன் கழல் பிரமேசர், தாவிலகத்தியலிங்க முளைசைமுக்க ணீசரர்பொற் றாளையேத்திப், பூவிரியும் பொழிற்கறையூர் மருடலிங்கங் கண்டுசிவ பொருப்பைக்கண்டான், 19

கண்டவுட னிறைஞ்சியயர் வகன்றுடலம் பொடிப்பவுள்ளங் கசியத்தூய, தண்டமிழ் மாதவன் கண்ட தீர்த்தத்திற் படிந்து சிவ சயிலந்தன்னை, யண்டிவலமாய்ச் சூழ்ந்து குமரவேடிருமுன்புதாகநின்று, மிண்டினு லெனக்குவந்த கொடுஞ்சாபந்தீர்த் தருளிம்மெய்ம்மையான. 20

என்றுமுந் தன்பர்தம்மோ டிருக்கவருள் செய்தியென
யேத்தியிவ்வா, றொன்று மூவொன்பது காரியமாய்ப் புரிந்தி
டலு முமையேசய் பசைக், குன்றுசிறை படைத்ததெனை வரும
யிலின் மீதுவந்து கொம்பாம்பாகக், குன்றுநகுடனைநோக்கி
யுரகவுருகதனை நீத்துத் தொன்மைபோல. 21

இத்தரணிக்கரசாகி நெடுங்கால மறச் செங்கோலினிதி
னோச்சிச, சித்த சுத்தமெய்தி மலபரிபாகமாகி யிந்தச் செகம்
போய்விடு, நித்தியமென்றறிந்திடுமெய்ஞ் ஞானம் வந்தானந்
தம் நீங்கா தோங்கு, முத்தியும் பெறுதிடுதியென மொழிந்த
கன்றுன தேவருக்கு முதன்மையானன். 22

பண்டுபோல் மானிடமெய் கொண்டுமலர்ப் பகழிவேள்
படிவந்தாங்கி, எணடிசையுந் தனிபுரந்து பலபோக மகபதிபோ
லினிது துய்த்துத, தண்டளவ மூரலுமை யொருபாகங் கலந்
திருக்குந் தமபிரானறன், புண்டரிகப் பதங்ழலிற் கலந்திருந்தா
னகுடனெனும பூமான் மாதோ. 23

நகுடன சாபந்தீர்த்த சருக்கம் முற்றிற்று,
ஆ விருத்தம. 279

## வள்ளி நாயகி திருமணச் சருக்கம்.

உம்பர் பணிந்திட விந்திரனாகிய வுலகாள் மன்
வெம்பணியாகிய சாவமகன்ற விதனு சொன்னும்
கும்ப மிரணடன வுந்தனமேந்திய குறமாதை
யெமபெருமான குகனன்பின் மணந்த வியல் சொல்வாம். 1

வேறு.

என்னையாளுடைக் குமரவேள் கயிலையிலிருந்து
பின்ன ராடலின் மனமபுடை பெயர்ந்திட லெழுந்து
வன்னமாமயின முதுகினிலிவர்ந்து வரன்மதியந்
தன்னிலொன்றிய திருத்தணி வரையினிற் சார்ந்து. 2

பச்சை மாமயில் விட்டிழிந் தப்பருப்பதத்தி
னுச்சி மீதினிற கதிரவன கதிர்புகா துயர்ந்த
செய்ச்ச பாசிலைச சந்தனச் சோலைநன் னிழலி
லிச்சையாய் மகிழ்ந் தாடலசெய் தினிது வீற்றிருந்தான். 3

அன்னகாலையிற் புவியிடை வடதிசை யடைந்து
பின்னர் நாவலன் றீவினிற் பெயர்ந்து பாரதமா
மென்னவோதிய கண்டத்து மெய்தி யாழ்வல்ல
மன்னு நாரதன் வெள்ளிமால் வரையிடை வந்தான். 4

அங்கணோர் தினைப் புனத்திடை யமைந்திடு மிதணிற்
சங்கை கொண்டனான் பருங்குலை வாட்டிடுந் தகைய
கொங்கை தாங்கி வெண்முருந்திள மூரன்மின் கொழிக்கத்
திங்க ளென்றவா னுதலினிற் குறுவெயில் செறிய. 5

காந்த ளங்கரத் தொருகவ ணேந்திநீள் கருங்கார்
கூந்தல் பின்புறஞ் சரிந்திடக் குமுதவாய் மலர்ந்து
தீந்தண் மென்மொழி குயிலினங் கிளியினந் திகைக்க
வாய்ந்த சொற்களாற் கதிர்கவர் குருகின மகற்றி. 6

புடை பெயர்ந்திடுஞ் சித்திரம் போன்றங்கு நின்ற
மடமயிற்குற வள்ளியை விழியினாற் கண்டு
படவராவுல கத்தினிற் பண்ணவ ருலகிற்
புடவி தன்னின்மற் றெவ்வுல கத்தினும போந்த. 7

சுந்தரத்திரு மடநலார் தம்மிலித் துணைநாள்
இந்தமாதுபோற் கண்டில மிறையவன் விழியில்
வந்த வெந்நிதயாங் குகனுக்கே யாமென மதித்துக்
கந்த வேடனைத் திருத்தணி தனில் வந்து கண்டான். 8

கருணை தங்கிய வாறிரு கண்ணுடைக் கடவுள்
சரண பங்கய முடியுறத் தாழ்ந்தெழுந் தைய
விருணி ரம்பிய வனஞ்செறி வெளிவெற் பிடத்தின்
மருளு மான்விழி படைத்ததோர் மங்கையைக் கண்டேன். 9

வேறு.

கண்ணைதன் மலையி லெயினர் பத்தியினாற் கடிகமழ் குவளை
செங் கமலந், தண்ணறுங் குமுத முருக்கொடு முல்லை சண்பகங்
கோங்குடைப்பங் கரந்தல், வண்ணமென் குமிழ்நன் மலர்கொடுவந்து
வரைத்தெய்வ மாகி யிற்றிருக்கு, மண்ணலைப் பூசை செய்வதற்
கமைத்த வண்ணிவிவர் மாலையென் றயிர்த்தேன். 10

முருகலர் வெண்மை முண்ணிந் திசைமுகத்திறன் முடித்தலை
துளக்குறப் புடைத்து, கருகிடக் குகையில் வல்லிபூட்டியுநாட்
காத்திலர் தேவரில்யாரு, மருள்கனிந்தவனை சிறைவிடுத்த, தா
ண்டானவன்மன மகிழ்ந்திடயர்து, புரிதவ மெனத்தோந்தரி
யதே வாங்கப் பூசைசெய் துதவினன் மலரோன். 11

கரியமால் பிறபிற கூர்மமென் மலர்தரும் கண்ணிணை
மீனரி மருங்குல, பொருபடை மிடறு துயிலிட முதரம் பூவணை
யல்குல்வேளுறும்,பரிமொழிகளிறு குழலெகுடை வதனம பருமம
ணிமுடிமூலை பாமன், சிரவணி நுதல்பொன் மணிகராமாகச செ
ய்யணங் காய்வள மன்றோ. 12

பொருவரு கலைமான் மேனகை யரம்பையொன்சசி யாதி
யாமாதர், மருமலர்க் கூந்தல் வளரிகண் டுடைமெய் வதனமா
முருபயிய ளுயப், பெருமையா லன்றோ வாங்கவர்தமமைப
பேருல கத்துளோராரு, உருவினிற் சிறப்பின் மகிமையிற் பெரு
க்க முளரவ ரெனவுரைப் பதுவே. 13

எங்கொடும் பகையாந் திங்களன் வதன மின்னுமாங் கவ
ன்மனை வியரிற, செங்குமுத மவாய் விழிகருங் குவளை சிறடி
நகமுடி வினையாய்த், தங்கிய தெனக்கு சிறிதுறுப் புருவந்தரு
கெனப் பணிந்த தாலன்றே, பங்கய மாதின் காம்முகந் தடங்
கண்பதத்தினிற் சிறிது போன்றனவே. 14

வேறு.

ஏந்துகொங்கை யிணைகள் கல்லாரமே
வாய்ந்த நோக்கு மருக்கொள் கல்லாரமே
மாய்ந்த வோதி பணிமலர்க்கோதையே
சேர்ந்து காரளி செய்புமங் கோதையே. 15

வேறு.

இன்னனம் வள்ளி நாயகியெழிலை யிசைத்திடு நாரதமுனி
யை, மின்னனையிற் படைதாங் கண்ணலாங் குமரன் விருப்புட
நோக்கியேயந்தப், பின்னலங் கூந்தற் சிற்றிடைமாதின் பேரெ
ழிற்சிறப்பதாந் தமதாய், இன்னமு முரைத்திடென்றுமக் மலர்
க்கேயாழ்முனி பகருவ தானான். 16

காரையர் தரத்தி லலையவிட்டிருளைக் கருத்தக மடக்கிமீ
ளாறலைச், சேரமட் பமித்தின் கொன்றையங் காயைச் சேர்விலம்
பார்த்திடச் செய்து, யாருறுகாலை மட்டுறப்படுத்திப் பசியதா
ஞ்சைவலக் கொத்தை, வாரிமே லெறிந்து கிகிலா இருக்கும்
வனம்பரின் மருங்கலர்க்குழலே. 17

எந்தையாம் பரமன் செஞ்சடைக்காட்டி னிருளகற் றிடு
மணி யென்ன, வந்திடும் பிறையை யினனிடை யேற்றி யாமனழு
பொழிந்திடப் புகுந்த, இந்திரவில்லை நிலைத்திடா தகற்றி யிருந்
தவர் விழிமனங் கவர், இந்துநந் நீட்டுந் திருநுதற்கிணை யத்தி
ருநுத லன்றிவேறிலையே. 18

எரெழுபுனைச் சூர்முதலானோர் யாரையும் வெற்றிகொள்
வலிய, மாரவேள் கருப்புச் சிலைதலை குனிந்து வணங்கி நாணுற்
றிடக்கண்டு, யாருறு திசைகள் பத்தினுமக்குப் பகையிலை யெ
னச்செருக் கடைந்து, வீரமேற் படைத்து விளங்கியபுருவ விற்
கிணை யியம்புவ ரெவரே. 19

திரிபுர மெரித்த பகழியை வீரன் றிருக்கையிற் படையையா
யந்தகனை, விரிதிரைக் கடலின் வந்தவெவ் விடத்தை யென்று
தண்ணளுண் டயுள் ளாக்கி, யரிபரந் தகன்று நீண்டுமை யளாவி
யணிமணிக் குழையொடு பொருதிக், கிரியுரங் கிழித்த நின்கை
வேலுடனே கேண்மை கொண்டிடுமிணை விழியாள். 20

வள்ளைகத் திரிகை யென்றுநூல் கற்ற வல்லவர் வீணிலே
வியப்புறுள்ளவா றுரைக்கி னவ்விரு வகையுமாயிரத்தினி லொ
ன்று நேரா, தெள்ளிதிற் செய்த மணிக்குழை கண்டோர் சிந்
தைதகண் கவர்ந்துமேன்மையவர், யெவ்வளவில் செம்பொ னூச
லுண்டாயி - னிருகுழைக்கிணை யெனலாமால். 21

கள்ளவிழ் நறிய கண்பக மலரைக் கடிந்து மென்குமிழி
னம்பூவை, யெள்ளிடிப் போதை முனிந்தலகத்தி லெதிரொ
ன்று மின்றிவீற்றிருக்குங், கள்ளுசேனயனக் கடிமலர்க்கந்நற்
றடியிடைப் பொற்றொடி செங்கை, யொள்ளிழை யவடன் மூக்
கினுக் கிணையே ஒருபொரு ளுரைப்பவ ரெவரே. 22

வள்ளமேற் சலஞ்செய் தூசலையலைத்து மன்னுகத் திரிகையை யிகழ்ந்து, தள்ளிவாய் கிழித்து மணிக்குழை வார் தாங்கிய வெழிற்குழை போயப், பள்ளவர் குறுதியி லரிதுயி லமர்ந்த பண்ணவ னுரதியங் கமலத், துளளுறை விரிஞ்சன் படைத்திடும் பொருளி னுவமைமேலை றாரைபபவனைவதே 23

தளிரடித் துவர்வா யனனடைத் தீஞ்சொற் றடமுலை காந்தளனு செனைகைக், களிமயிற சாயல் வள்ளிதன் வதனக் கமலநேராகுதற் கன்றே, குளிரமதி பரமனிடத்தினிற புகுந்துநகோவிடை நிலையிலா துலைநது, நளிர்கடற மேயநதுந தேவராலயத்தை நாடொறுஞ் சூழுகலாமால். 24

வேறு, மாங்குயின் மொழியினாள் வதன நோக்கிவா
ளோங்கிய மதிநிக ருற்றிலேமென
வேஙகிய மனப்பிணி யாலுடமபெலாம்
வீங்கியு மிளைத்தது மேவினைமோ. 25

வடிமதுத் துளிகருங கமலமென் மலரில் வைத்திடுங் குமுதமும் பவளக், கடிகையு மகறகுட் டாளமாவிகையுந் கண்டனபோலுமா முகத்திற, குடிகொளுஞ் செய்ய வாயுமெலவிதழுங் குளிருமவெண் மூரலுமெனைப், பிடிநடை மாதின் பவளவாய் கண்டோர் பேசுவதன்றி வேறிலையே 26

வால்வளைக் குலஙகள் வாய்பிளந்தேங்க வளரிளம் பசுங்கமுகொற்றைக், காலினிலா றரிய தவமுஞற்றிடச்செய் காரிகை மணிமிடற்றினுக்கு, நூலபல தெரிந்து கவிசொலும் புலவோர் நுண்ணிய மதியினு ராய்ந்து, மேலினி யுவ்மை யாதுசொல் குவரோ மேதினி யிடத்தரி யேமால். 27

திருப்பிறந தகமோ வானவருணவேழ சித்தச னேந்தியவில்லியோ, விருப்புற வவன்முன் னாதுகாக்கன்மோ மேற்கொளும் பிரியதோ பணைக்கைப், பொருபபு மாமுகத்தோன் தந்தையைச சூழ்ந்து பொருக்கென வாங்கியுண்டது வோ, மருபபகந் துளவோங் கிசைக்குமேல விசையோ மாதராள் பகர்நதிடு மொழியே 28

மருமலர்க் கூந்தல் மாதுதன் தோள்போல் வாய்த்திலம் யாமெனவெண்ணி, பொருகழைக் கண்முத்தரும் பியுள்ளுடைந்து முண்ணம கண்டுயர் வரையிடத்தின், வருகழைக் குலமுமந் தவாறுகி வந்து தாழ்ந் தெம்மையின் வாறுப், பொருதரவமையென் றிரந்ததாலன்றே பொருந்திய தப்பெயர தற்கே. 29

பதுமமென் மலரைப் பயமுறப்பங்கப் படுத்தியாழ் கயத்தினில் வீழ்த்தி, மதுவிழிந் தொழுகுங் காந்தளைக்கான் மேல் வணங்கியே நின்றிடக்கண்டிங், கிதுவது விரண்டு மிணையொழி பின்னரியாதா நேரின்றி வீற்றிருக்கும், புதுமலர்க் கூந்தற்முடியிடைச் சேற்கட்பொற்றொடி திருமலர்க்கரமே. 30

வேறு.

ஐங்கரன் முனிசொல் லெழுதியபேடோ வவனெழுத் தாணியோ பொதியந், தங்கிய முனிவனன்னையோ வதனந் தனைமுழு மதியென வெண்ணிப்,பொங்கிய நிலவை யயிறரவந்து புட்கொலோயா தெனப்புகல்வேன், குங்கும மணிந்து ததும்பியண்ணுந்து குவிந்திடுங் கனதனந் துணையே. 31

மங்கையர் சூடாமணியெனவந்த வள்ளிக்கு வயிறெனமலரிற் றங்கியவேத னிளந்தளிராலெச் சமைத்தபி னரியமாதவற்குத் திங்களின்வதன நிலமகளுடனே திருமகள் பதமலர் வருடவங்கதல்லியோக நித்திரைசெய்யு மாலிலையென்ன வானதுவே.

பாரவெம்முலையைச் சுமைக்குட மென்னப் பற்றுவான் புகுந்தசிற்றெறும்பு,சேரவே தனினின் றார்ந்திடுமொழுங்கோ செழுமுலையிரண்டிணை யோகது,மேருவாங்கமலராமோ வன்றி யிபமுகத் தெழுந்திடுங் கரமோ, ஆரமாலிகைதாழ் வயின் வயின் செறிந்த வழகொழுகிய மயிரொழுங்கே. 33

சந்ததவாச நறவு கொப்பளிக்குந் தாமரைத் தவிசினிலிருக்கும், அந்தணனுற்றி னிர்ச்சுழியதனையா யிழையுந்தி செய்தனனோ, செந்துவர்வாய்மின் னுந்தியையந்தச் சீதநீர்ச்சுழிகள் செய்தனனோ, விந்தவாறன்றி மற்றொருபொருளோ பிணைசொலயார்க்குமுற்றுதால். 34

உயிர்தோறும் பரமனிருந்துசெய் தொழில்க ளுய்த்துவிப்
பானெனவவன்சொல், செயிர றுநூலாலறிவதுபோலச் செழுமணி
மேகலைகூறை, யியலுறத் தாங்குந் தன்மையினெங்கு மிணையி
லா வோவியவுருவக், குயின்மொழிதனக்கு மருங்குளுண்டெ
ன்று கூறுவதன்றி வேறிலையே. 35

வடிமதுத்துளிக்கு நறுமலர்க்கொம்புமார வேளுருவமின்
வல்லிக்,கொடி யிளவஞ்சி விசும்புமெல்லியநூல் கோளரிவெண்பி
றைக் கொழுந்து, துடியையயம் பொய்கைப் பிடியெனப்பலருஞ்
சொல்லுவ தன்றிவாரிதிருழ், படியிசை மதுரக் கவிஞர்தம்மன
மாய்ப் பகலாம் பாவைதனிடையே. 36

சேயிழையல்குலரவெனவதனைத் திங்கள்கண் டஞ்சிடுமெ
ன்றும், சாயலைக்கண்டு மயிலெனவந்தத் தகையரா வெருண்டி
டுமென்று, மேயுமிவ்விரண்டு காரணந்தனையு மெண்ணியன்றோ
படாங்கொண்டு, மேபொற்றிகிரி யனவல்குலதனை வெளிப்ப
டாவகைமறைத் தனரால் 37

மதிநுதற்பவள வாய்மயிற்ச்சாயன் மடவரநிறன் மணிக்கு
றங்கு, சதிர்பெறுகதலிக் குலத்தையுங் கம்பந்தன்னையும் வென்
றமை காணூஉ, வதிர்குரற்றறுகட் புகர்முகநால்வா யானையின்
கொடுங்கை மற்றதனை, யெதிரிடவஞ்சித் துதித்தலாற்றுதிக்கை
யெனப்பெய ருற்றன மாதோ. 38

வேறு.

கனவினிலு மெமையெதிரே காணிலச்சங் கொண்டு
வெய்யோன் கதிர்புகாத, வனமதனிற் கடிதோடும் வாலியெதிர்
பொருதவஞ்சி மறைந்துநின்று, முனைகொளுவெங் கணைதொ
டுத்துத்துணைவரொடுஞ் சேர்ந்தவனை முடித்தானென்னத், தறு
விராகவன்வீரந்தனை நகைக்கு மடவரல்தன் சாநு மாதோ. 39

காவினிற் பயிலு மதனவேள் விருதாங் காகளஞ்
சின்னமாய்ச் செய்து, மாவரா லினையும் வனததிடைத துரந்து
மன்னிடு மெழிற்கணைக்காலை, யேவுபெய் தூணிகண்டுளம்புழு
ங்கி யாமினி யிதற்கிணை யெவ்வா, றுவமென் றிரங்கி நின்றதா
லன்றோ வதன்பெய ராவமானதுவே, 40

மாதவன்விழியு மாரவேள்கணையு மதுரமாம் பாற்கடற்
பிறந்து, கோதையில் லழுமமாய்ச் செய்தனை யினுமோர் குறை
யுளதென்னெனில் வள்ளி, பாதநோக்க வேண்டுமெவ் வண்ணம்
படைத்தரு ளெம்மையென் றன்றோ, வேதயில் விரிஞ்சன் றனை
ச்செழுங்கமல மின்னமுஞ் சுமந்து நிற்பதுவே. 41

வேறு:-இத்தகு கனிஞ் சேந்திழை யவளை யானவண்கா னு
மப் பொழுதே, யத்தநின் பொருப்புப் புயத்தினிற் றரிக்கு மல
ங்கலுக் குரியளா மென்னச், சித்தமேற் கொண்டுவந்தன னவ
ள்பாற சென்றுநீ மணம்புரி யெனவே. மெய்த்தவ னுரைத்து
மகபதியுலக மேவினன் பின்னரெம் பெருமான். 42

வேறு:-இருக்குமுதன் மறைபலவுந் தேடரிய பதமும்பூ
விடத்திற்றோய, விரித்துடுத்த கச்சிடையும் வீரகண்டா மணிப்
பதமும் விளங்கவுற்ற,கருத்ததனி னாதன்செல் வடிவமெலாங்
குடியிருக்கக் கணையும் வில்லுந், தரித்தவேடக்குமா னாகியுயர்
வள்ளிவரை தன்னில் வந்தான். 43

சந்தமணங் கவர்ந்துதென்ற லுலவிவரு மலைச்சார றன்னி
லோர்சார்,வந்ததினைப்,புனத்தினிடைக் கிளிகடியுங் குறற்குயிலை
வணக்கநின்ற, செந்துவர்வாய்த் துடிமருங்குற் சீரடிக்குங்கும
க்கொங்கைச் சேற்கட்சீத, கந்தமலர்த் திருவுமொப்பில்களி
மயிலை விழியிணைகள் களிப்பக் கண்டான். 44

வேறு:-சிங்கவே றெனத் திடங்கொள் சிந்தையை
யங்கசன்கணை யலர்கள் போழ்ந்திடத்
திங்களானனச் சேற்கட் சிற்றிடை
மங்கை மேவிதண் மருங்கிற் சென்றனன். 45

ஒலியவுரு வுறழுநின்றிடும், பாவைதன்முகப் பதுமநோக்கி
யே, மாவும்வேலையும் வரையும்வென்றவேற, றேவனுண் மகிழ்
வோடு செப்புவான். 46

அல்லைநேர் குழலாரணங்கனுய்ச்,சொல்லுநின்பெயர் சொல்
லிலாயெனில், மல்லலூர்சோலல்லேனின் மாநகர், செல்லுநல்
வழி செப்பு கென்றனன். 47

வேறு:-மாதர்நோக்கினின் மைக்கணெழுதவோ, பாதபங்க யம்பற்றி வருடவோ, சூதைவென்றது ணைமுலைமீதினில், சீத குங்கமச் சேறினையப்பவோ. 48

இலகுதண்பிறை யேய்க்கு நுதலினில், திலகந்தீட்டவோ சிலிக்குழலினில், மலர்நறும்புனை மாலிகைசூட்டவோ, கலகமாரன் கலவி நூலோதவோ. 49

கந்தமார்கன்னிகாரங்குமிழ் முருக்,கந்தவாம்பல்செவ் வம்பு யஞ்சண்பக; மிந்த நன்மலர் யாவையுங்காட்டினை, யந்தமுல்லை யுங்காட்டியருளுவாய். 50

அத்தங்காட்டினை யாட்கங்காட்டினை,சித்தமாரச்செழுந்து கிற் காட்டினை, நத்தங்காட்டிய நாகரிகக்குளிர், முத்தங்காட்டி யென் மோகந்தவிர்த்தியால். 51

காரைகாட்டுமைக் கண்ணிணைகாட்டிவேள் போரைக்காட் டினை போருக்குமாமணித், தாரைகாட்டுந் தனத்துணை தந்தல் குற், றேரையோட்டிச் செயம்பெறச்செய்குவாய். 52

வஞ்சகமாரன் மலர்க்கணை தாக்கியென், னெஞ்சமுடைந்தது நின்பதபங்கையந், தஞ்சமன்றிவேறில்லைத் தயவுகூர்ந், தஞ்சலென் றினியாண்டருள் செய்குவாய். 53

கரமென்றும்மலர்க் காந்தளுங் கண்ணென்றுஞ், சரமுந் தோளென்றுந் தன்கழையுங்கொண்ட, வரவமேகலையாயிதழ்த் தேன்தந்து, விரகதாபவிடாய்தவிர்த்தாளுவாய். 54

வேறு:-வென்றிவேல் பயிலுமின்றி வேட்டுவவுருவந் தாங் கும் வன்றிறற் குகனிவ்வாறு மாமயற் குணங்கள் காட்டி, நின் றிடு மெல்லைதன்னில் நெடியதா மிரலைகாளந், துன்றிய பம் பைசங்கந் துடிக்கடலொலியைச் சாய்ப்ப. 55

வேற்றிறல் வேடர்சூழ வில்லொடு வாளிதாங்கித்
தந்தையா நம்பியென்போன் சார்தலு மஞ்சுவான் போல்
விந்தமால் வரையின் மேலோங்கும் வியன்சினை வேங்கையாகி
யந்தர மளாந்து நின்று னறுமுகத் தமல னங்கண் 56

வேறு:-கண்டனரத தருவைவந்த வேடர்குழா முற்றுமெரி
கண்ணரி னோக்கிப், பண்டொரு காலந்தனிலுங் கண்டறியா வே
ங்கையிந்தப் பசும்புனத்தின், விண்டொடாடர்ந்து நின்றதென்ன
தீங்கொவேவள்வாய்க் குபத்தால் வெட்டிவெட்டிக், கண்டதுண்
டஞ் செய்யுமென்பார் வேரோடேதனையுமெனக்கூடிற் சொல்
வார். 57

வருகுறவ ரிவ்வாறு சினத்தினொடு புகலவவர் வதனநோக்கிக்
குரிசிலாகிய நம்பிகூறுவானம்மனோர் குடிக்குத்தீங்கு
தருவினைற் புரிந்திடவும் முற்றுமோ மதியிலீர் சாற்றுமென்ன
திருமகருறுந்தேனுந் தினைமாவுங் கனிகிழங்குஞ் சோநல்கி 58

வேடர்பிரான் தமர்களொடுஞ் சேர்ந்து மேவியபின் வேங்
கையாகி, யாடல்செயு முருகேசன் பண்டுபோல் வேடவுருவாகி
த்தோன்றி, யேடவிழ்தார்க் குழல்சரிய வாலோல மெனச்
சொல்லியிதண்மே னின்று, பேடைமயிலன்னாட னருகில்வந்து
பலமொழிகள் பேசலுற்றான். 59

வேறு:- குறவர் பூங்கொடி யேயிக் குரல்கவர் புறவுகிள்ளை
முதலிய புள்ளெலாம், நிறையுமிபோசனை நீளத் துரத்தவா
னறைமலர்தரு மாதவி நண்ணுவாய் 60

அல்லைநேர்குழ லாயுன் னணிமுலைக், கல்லதன்றிமனமுங்கல்
லானதோ, வல்லமாரன் வடிக்கணை யாலென்மெய், சல்லடைக்
கண்ணதாக்கிச்சலஞ் செய்தான். 61

என்னவோதி யிறையவனிற்றலு, மன்னமென்னடை யாய்
தொடி மாதராள், மன்னுநாணொடு மானில நோக்கியே. கன்ன
லின்சுவை கைக்கக்கழறுவாள் 62

இம்மொழி யெமர் கேட்கிலிதுபொழு, தம்ம நும்மையடர்
த்தத் துனிவராற், செம்மையன்றுநீ சிவனைத் தாங்கியே, நன்மை
யோடு நடவுமினி யென்றான். 63

வேறு:-வேல்லைவிட்டு வருங்காளை யுடனிவ்வா றுயிழையாள்
விளம்பி நிற்குங், காலையிலெம் மன்னைதனைப் பெற்றெடுத்த வே
டர்பிரான் கருமைவாரி, போல் மறவர் புறஞ்சூழ வருதலைக்கண்

டினிய மொழிப் பூவைபன்னுன், வால்வளைக்கை தனைநெரி த்து மெய்நடுங்கி முச்செறிந்து வாடிச்சோர்ந்து. 64

வேடுருவாய் வந்தகுகன் முகனேக்கி யெமர்கள்பொல்லா வெய்யர்நில்லா, தோடுகெனப் புகலுதலுந் தயனிமாதுக்கு நம்மே லுண்டுண்டென்ன, வாடுமுக வரவிந்த நாண்மலரைக் காட்டமுது மறையோனுகி, யாடுதலையும் மோங்கிக் கனைக்கு நெஞ்சந் தளர்நடையு மாகிநின்றான். 65

வருவேடர்தம்பெருமான் திருமகடன் முகனேக்கி மாதே யிந்தப், பெருமறை வேதியர் விருத்தர் யாரென்னக் குதலைமொ ழிப்பேதை சொல்வாள், தெரிவரிய காஸ்மீர தேசமதிலிருந்து தெற்குத் திசையிற் சென்று, கரியகட லாடுதற்காய் வந்தன ராம் வேங்கையெதிர் கண்ணுற்றஞ்சி. 66

கடிதோடவலியுமின்றித் தடுமாறி யயர்ச்சியொடுங் கவலை கூர்ந்து, முடியாத பசியினெடு மிங்குவந்தா ருழுவைகண்டு முடுக்கப்பட்ட, படியாலொன்றையும் வேண்டா ரொருவர்வழி த்துணைகூடிற் பற்றிக்கொண்டு, நெடிதாமெம் மலைக்கானம் நீங் கியப்பாற் சேர்வமெனநிகழ்த்தி னுரால். 67

என்னவருந்தவப்பேற்றால் வந்தமகள் புகலுதலு மிணையில் வேடர், மன்னவனே ராறுமுகங் கரந்துவந்த வேதியன்றன் வத னம் நோக்கிப், பன்னரிய முதியவரே மூன்றுநாளிங்கிருமப் பால் யாம்வந்து, நன்னர்வழித்துணைகூட்டி விடுதுமிரு பசியார நறவினேடும். 68

கந்தமிகுங் கனிதினைமா வேண்டுமட்டு மிக்கன்னி கைகொ ணர்ந்து, தந்திடுவா ளருந்தியிளைப்பாறியிரு மெனவேடர் தலை வனேன், சிந்தைமகிழ்ந்துரைத்திடலு மயல்நின்ற தமர்வேடர் செப்புவாரிவ், வந்தணனைத் தனியிருக்குங் குலமகடன்னிடத் திருத்த லழகிதன்றே. 69

எனச்சொல்ல வேடர்பிரா னிருங்கானில் வியாக்கிரத்தா லிடர்ப்பட்டிந்தத், தினைப்புனத்தி னிடைவந்தான் மறைக்குரிய வேதியன்மெய்த்திடத்தனல்லன்,கனைக்குநெஞ்சந் தலையனிப்பும்

காட்டுமுதுமூப்புடையோன் காளையல்லன், மனப்பயத்தாலே
வனையிப்பொழுதே யேகென்றல் மாண்பதன்றே.

தனியிருக்குந் திருமகட்குந் துணையாகு மெனப்பலவுஞ்
சாற்றியிங்ஙன், பிணிதிருத்தி முதியவன்போ லெனவுரைத்துக் குன்
றவர்கோ னெயினரோடுங், குனிசிலைவேங் கணைதாங்கி மரை
யுழுவை முயல்கரடி குரங்கமேனக், கவிபடைங்கல் குருகினங்
கள் வேட்டஞ்செய் தவன்பதியிற் சார்ந்திட்டானல். 71

வருவேட னகன்றதற்பி னெம்பெருமான் குறமங்கை யாயி
லுக்கெதிர்மேற், பரிவுடைத்தா தலினன்றே தமர்க்கேற்கப்
புலிதொடர்ந்த பயத்தாலிங்கு, மருள்கொடுவர் தனலிந்த வேறி
யனென்றனை னென்ன மனத்திலுன்னிப், பெரிது மகிழ்ந் தாவி
மடப் பேதை முகம் பார்த்தினிய பேசலுற்றான். 72

யான்பகர்ந்த மொழியனைத்துங் கருதுனது காதைக்கு
மேபவினின்று, வூன்பொருந்து வேற்றடக்கை யுற்றக்குறும் பகர்
தெனதின் னுயிரைக்காத்தாய், வான்புரிந்த நன்றிகலக் குவதிரு
ழ்ந் திடப்பரிசைம் மாறென் செய்யுங், கான்பொருந்துங் குழலவ
ண்ணிகேசெய்நன்றிக் கியான் செய்யுங் கைமாறென்னே. 73

வேறு.

இனையநன்மொழி யியம்பியமாதராய், நனிபசிப்பிணி நலிய
வாடினே, னெனைநறுந்தினைமாவுந்தேனை, நனை நிகர்த்து வருந்தி
சாற்றுவாய். 74

பாரவெம் முலைத்துணைப் பாவையேபசி, தீரநன் மாவொடு
தேனளித்தனை, நீர்விடாய் கொண்டன னெடியபசிக்கிரி, சாரலி
ற்றடஞ்சுனை தன்னைக்காட்டென்றான். 75

வேறு.

வாட்டடங்கண் மாது சொல்வாள் வடபாலேழு வரைக்கப்
பால் மருங்கின் மாட்டுக், கோட்டுதழ்ச் செங்காவிமலர்க் குவளை
யுள்ளது சென்றருந்து வாய்நீயென்னக், காட்டினல்லாளிருவிழி
ப்புங் கடுங்கானிலெவ்வண்ணங் காண்பேனென்று, நாட்டமொ
ரு மூன்றுடையோன் றனக்குபதே சித்தகுரு நாதன் மன்னோ. 76

யெனவுந் தையலல்லாள், பொருபிழைக ளென்மீதிற் கற்பிக்க
வந்தக்[illegible]யோ போதுமென்றே, மருளர்ச்செந் திருவனையாள் வெ
குண்டுசொல வுயிர்ப்பாங்கி வணங்கிச்சொல்வாள். 90

அறியாத சிறியேன்சொல் பிழைபொறுத்துக் கோடியெ
ன வன்பிற்கூறிச், செறிவாய்நன் மணத்தோடு மிருளையுடன்
மாதிருக்குஞ் செவ்வி நோக்கி, வெறியாருங் கடப்பணிதோள்
வேலவன்பூந் தழைகன்னி விரைவினேந்தி, மறிமானைக் கியரி
ருக்குமிதனிழலி னின்றினைய வகுத்துச் சொல்வாள். 91

யானெய்த மதகிரியொன் றீர்சொரி சொரிந்திடவுமிந்தக்
கானிற், றனெய்தக் கண்டதுண்டோ மின்னனையீ ருரையுமெ
னச் சாற்றக்கேட்டுக், கானெய்துந் தார்மார்பா வுனதுபெரு
வலியுநீ கற்றிருக்கு, மேன்மைமிக்கை தனையுமெங்கட் குரைப்
பதென விருளையவளியம்பிப் பின்னும் 92

அந்தணனிற் பெரியவனை தானையின்றிச் சிலையினுடனப்
புமின்றி, விந்தகிரி போலுயர்ந்த தறுகண்மத வாரணங்கள் வேட்
டஞ்செய்யத், தந்திரமு மந்திரமுங் கற்றதுமின் சொல்லலாந்
தனியாயிங்கு, வந்ததென்ன காரியஞ்சொ லென்னமறை யவ
ளுன வள்ளல்கூறும். 93

வடதிசையி லிருந்துகன்னி யாகுமரி தோய்ந்திடவும் வந்
தேமென்றான், றடமுலையளிவ்வனத்திற் றங்கியதென் னென
க்கொடிதான் றடுத்ததென்றான், றிடமனதாய்த் தடைதீரத் திரு
ம்பினதூரளவுஞ் செல்வாயென்று, விடமகன்ற வல்குநல்லீர்
கார்த்திகைநாள் செல்வனியா னென்றானண்ணல். 94

வேறு.

காரிகைமீள்க வென்றா வருகுவை கழறுகென்றாள்
வாரியை முனிந்தோ னென்றும் வருமிருளகன்றவென்றான்
பூருவமையாவெங்க ளூற்றது புகல்கவென்றாள்
சூரியன் காலைதன்னிற் றோன்றிடு மென்றான் றூயோன். 95

பூந்தழை கன்னிகொண்ட புதுமையென் னென்றாள் சூரைக்
காய்ந்தவ னினியதோர்மான் கன்றகப்படுத்தற் கென்றான்

ஏந்திழை நின்மேல்வாச மென்னென்றாள் பிரணவங்க
ளாய்ந்தவன் பருத்திதன்று லாகியவாச மென்றான். 97

கோதைநின் னெஞ்சிற்சூது குடியிருப்பென்றா ளங்கோ
னாதுநீ ரணிந்தகச்சிங் கவிழ்த்திடிற் றெரியுமென்றான்
ஏதமில் மறையோனின்ற னிடைபொய்யா மொழியாமென்றா
ளோதிலும் மிடைபொய் யன்றி யொருபொய்மற் றில்லையென்றான்

நீயிவி புற்றிகன்னெ டென்றனள் நிகரிலாதான்
தீயினு ளின்றுவந்த செம்மறி யாகுமென்றான்
மேயமற் றாருநாமம் விளம்புதி யென்றாள் தையல்
தூயவன் குறங்குசோகந் தணையதனாமென்றான். 98

வேறு:-இன்னவா றெம்பிரானு மினியதாய்த், தன்னுயிர்த் துணைத்தாழ்குழற் சேடியுந், சொன்னவாசகத் தான்மகிழ் துன்னிமேப, யன்னமன்னவ ளன்பிலிருந்தனள். 99

வேலல்காத்திடு மேந்திழைசெய் கையு, மானையெய்தின மென் றிடுமந்தணன், பான்மையுமவர் பார்வைகள் சொல்லுமென், றீனமின்மனத் தெண்ணியிருளையும். 100

வேறு: மயிலனைய தலைவிதிருத் தாள்பணிந்து விடைபெ ற்ற வட்டாலோர்சா, ரயலதனிற் றன்காக்குந் தினைப்புனத்தி னிடையேகி யங்கணுற்ற, குயில்கிளிகள் புறவுமுதற் புட்குல மெலாந்துறந்து குலவிநிற்கு, மியலறிந்தெம் பெருமானும் பாங்கியிடத் தேகியினை யியம்புவானால். 101

வேறு:-கன்னியன்னப் பேடைநல்லா ளெனதுயிரு மனது மொக்கக் கவர்ந்துகொண்ட, பொன்னனையா ளிடத்தினிற்சென் றிதயுசித மொழிபலவாய்ப் புகன்றென் சிந்தை, தன்னைமகிழ் வுற ச்செய்யிற் குலங்குடியோத் திரமுழுதுந் தழைத்துவாழ்வாய், பின்னுமொரு கோடிபல னினக்குண்டா மெனவிரங்கிப் பேச லோடும். 102

தலைவிதிரத் தெரிந்துயிர்ப் பாங்கிசொல்வா ளுலகதனிற் றலைமையான, குலமதனி லவதரித்த வந்தணனீ யடாதமொழி

கூறலாமோ, மலையெயினர் குலமதனி லென்றுமிலா விழுக்கொ
ன்று வாராதற் கோவென், தலைவிபிறந் தனனென்னுஞ் முனிவா யிப்
பேச்சினை தவிர்தியென்றாள். 103

வாட்டடங்க ணாங்கியிவ்வா றுரைத்திடவு மய்பன்மதி
மயங்கிப்பேதாய், கோட்டுமுலை மயிலையெம்பாற்கூட்டிவிட்டா
லுயிர்வாழ்வேன் கூட்டாயென்னிற், றட்டளிர்ச்செசந் துவர்வாயா
டன்னுருவம் வெண்படாந் தனிலெழுதைகயாற், றீட்டிமட லூர்ந்
திடுவென் பழிவரும்நா ளாக்கதனைத் தெரியாயென்றான். 104

மாதவவந் தனைனிவ்வாறுரைத்திடலும் பாங்கியஞ்சி மதி
யின்மிக்க, வேதியர்கள் பெருமானே யெங்கள்குலக் கொழுந்
தான மெல்லிரலலாள், பேதைமடப் பருவமொரு விரகறியாள்
குதலைமொழிப்பிரிந்த தில்லை, யேதுமறி யாமதலை நின்காதற றவிர்
ப்பளோ யியம்பாகென்றாள். 105

தாதவிழுங் கூந்தனல்லாய் நினதிறைவி யானவள்ளி தனை
யுபார்வை, காதல்மகன் செப்கைதனி லிர்த்திருக வென்பதுநீ
கருதிலாய்கொல், சிதான்றன் விழியின்மணி சிவமுனிவன றவத்
தில்வந்த செம்மான்கன்று, கோதறுநல வேடநம்பி குலஞ்செய்
பலன் றரும்படிவக் குன்றமன்னாள். 106

என்னுயிருக் குயிரவளைத் தாமதஞ்செய் யாமலென்பா
லிணங்கல்செய்யென், றென்னலரா மசுரர்குலம் வேரறுத்து
வேல்கரநதோ னுரைக்கப்பாங்கி, தன்னிறைவி பாலணைந்து வே
தியனசொன் முறைமை முற்றுஞ் சாற்றியன்று, னின்னுயி
ரைக் காத்தருள்செய் யெனவுரைத்து மயில்கரந்தோ னிடத்
தில்வந்து. 107

எங்கள்குலக் கோமாட்டி தயவுவந் நடக்கிலின்ப மென்று
முண்டாந், துங்கமறை யோயவள்பாற் செல்லெனவுஞ் செப்பி
யந்தத் தோகையன்று, எங்கணமைந் திடுமிதனி னிருக்கவரு
முகங்கரந்த வாதலுனான், மங்கைவள்ளியிடத்தில்வந்தான் பூங்
காவில் மாதவி மண்டபத்திற் போந்து. 108

பின் மகிழ்ந்துகாத்த, லாய்ந்தமறை வல்லோரயினின் மேற்கடனு மெனப்பலவு மனைபிற்கூறித், தீந்தண்மொழிப் பாங்கியவள் திரும்பிடலுந் தோகையொடுந் தேவர்தேவன். 115

வேறு:-விரைவினிடந்து பலபலவரையும் வெங்கடுங்கான முநீங்கித், தரைகிழித்துயரு நீள்பெறுவிசும்பு தைவருஞ் சிவ மலைச்சாரிற், குமரகமழ் பூங்கா விடைமதுபிலிற்றுவ குரவ மாதவிசொரிகின்ற, விரைமலர்ப் பாயவிடைவள்ளி யுடனே வீற்றிருந் தவன்சுரர் மேலோன். 116

ஈங்கிவ ரிவ்வா றிருக்கவேரில்லா வெம்முனை யன்னையைப் பயந்த,தீங்ககன் மனத்ததா யருந்தமருஞ் செற்றலர் செருக்கினை முருக்கும், வாங்குவெஞ் சிலைகரைத் தாதையு மூரின் மற்றுள ரியாவருமீண்டிப், பூங்கிளி மொழியைக் கண்டிலாதழுங்கிப் பொருக்கெனவெழுந்தயல் மனையும் 117

வேறு.-தெருப்பெரு சதுக்கங் கவலைபூந்தடவை செய் குன்றுமலர்நறுஞ்சுனைகள், பருப்பதச்சார லருவிதாழ்விடங்கள் பருமணி மேடையாடரங்கு, விருப்புமுற்றேறிய முடன்பல காணு மேவிட னெங்கணுந் தேடித், திருப்பயில் காவில் புகுந்திடத் தோறுந் தேடியா ராய்ந்திடுமளவில். 118

வரிவிழிப்பேதை மலரடிச்சுவடு மறையவன் றிருவடிச் சுவடுந், தெரிவரப் பற்றித் தொடர்ந்துவிலவெயினர் சிவமலைநோக் கரின்வந்து, விரிமலர்க் காவினனங் குடனிருக்கும் வேதியன் றனையெதிர் கண்டார், தரியலராகி வந்திடுமெயினர் தம்மையு மன்னையுங் கண்டாள். 119

கண்டவெல்லையினில் மனமிகக்கலங்கிக் கைநெரித் தெந் தையைநோக்கித், தண்டி றலெயினர் வீரர்போர் கோடி, சிலையு டைக்கையராயிங்கு, மண்டிவந்தனரே யென்செய்து மினியா மன்னவ வெனவிரங்குதலும், மண்டர்கள் பெருமான் மயிலியன் மாதை யஞ்சலென்றவ ரெதிர்நின்றான் 120

வந்திடுமெயின ரண்டர்கோடியின்மேல் வரைவரைநக் கெலாமேலா, மெந்தையென்றறிபா திசழ்ந்து வெஞ்சினத்

தோடிவனொரு மனிதனேயெமது, கொந்தவிழ்கோதை மாதி
னைக்கரந்து கொண்டுசெல்வானெனக்குறித்து, வெந்திறற் கணை
கள்கோடியின்மேலும் வேலவன் மீதினிற்பெய்தார். 121

ஆங்கவர்தொண்மேல் வருகணைதனையே யண்டலர் சிரங்க
ளுஞ்சரணம், வீங்குடல் மார்பு புயமிடை துடைகள் விரைவி
னிற் றுணியெனவேவவித், தாங்குவெஞ் சிலைக்கை யெயினரோ
ரிலக்கர் தம்முயிரொருகணைப் பொழுதி, னீங்கிடத் தடிந்து
புன்னகைசெய்து நின்றனனிகரிலெம மண்ணலே. 122

அந்தகாலை நாரதமுனிவனாயிடையெய்தி வேல்கரந்து,
தங்கவீரனையு மவனிடத்திருக்குஞ் சுகமனமொழியணங்கி
னையு, மங்கமெட்டுருப்புப் புடவியிற்படிய வடியணிந் தேற்றி
முன்னின்று, சங்கரனுதவுங் குமரயாவென்று சாற்றுவன் மீ
வெனவுரைப்பான். 123

மாதவன்சிவமா முனிவரனிவர்கள் வளர்முற்றுணர்ந்து வெம்
மாயை, யாதரவுடனே பலபலவளர்த்த வருந்தவ வெயினர்கோ
மானைக், கோதிலாவுவன்றன் குலத்துளோர் தமைக்கொல்லுந்
தனீதியன்றிவரிப், போதினிலுய்ய வருள்புரிகென்னப் பூதரக்
குமரிசேய் மகிழ்ந்து. 124

வருசரற்கால மதியெனவிளங்கும் வதனமோராறு முங்
னான்கு, திருமலர்க்கரமுங் கோடியாதவர்கள் திரண்டொரு
புடையுதித்தெனன்னப், பொருவருவடிவுங் கிண்கிணிசதங்கை
புலம்புசெஞ்சீரடிமலரு, மருள் செறிகமலவிழிகளீராறுமாகி
வே வேலேந்திநேர்நின்றான். 125

வேறு:-இந்தவாறுகண் டெம்பெருமாட்டியு, மந்தமில்லதோ
ரற்புதமெய்தியே, பந்தவேதப் பயன்றந்தைக் கோதியே, வெந்
தைமுன்னின் றினையன கூறுவாள். 126

வேறு:-மின்னரு கதிர்வேற் கரந்தொருகோடி வேளை
னுன் திருவெழில்கரந்து, மன்னிரு கரமுங் கரந்திருமுன்றுமனி
மதிவதனமுங் கரந்து, முன்னையவங்க முழுவதுங்கரந்து முதிர்
மறைவேதியனாகி, யென்னைநீ பொருளாய் மதித்துவந் தெளி
ப்பட்டெதம்பெற வினியினை புகன்று. 127

நன்னெறி முறைமையே வழிவழிசிறந்து நலந்தரும் பொருள் தனையுதவு, மென்னுயிராப் பாங்கிக் கிடம்பல பேசியெனக்கவட் கொணர்ந்துபோதித்து, மின்னிலவரைப்பின் னேழைமார் போலி யா னீட்டிடும் பெண்டிதனையின்றும், மின்றும் வணங்கி நின் றவா றென்றே பேசுக வென்னையாளிறைவ. 128

கருதருங்கவுரி மதலையென் றன்னைக் கனவினுந் தெரிந்தி டின் மறவன், றிருவுளப்படிக்குச் செயத்தகும் பணிகள் செய் குவன் மறையுரான் முதலும், பொருவின் மாதவனு முனிவருஞ் சுரரும் போற்றிடுங் கிண்கிணிச்சரணப், பெருமநின் மாற்றம் வினவிடா திருந்த பிழையெனக்குற்றதே யென்ன. 129

வேறு:-பேதைசொற்றனுந் தேவர்தே வாகிய பெருமான்
மாதரா யிங்கு வருகென மடியில்வைத் துன்மேற்
காதலாலவிளை யாடலாய்க் கடிகமழ்ந்தினது
பாதபங்கயம முடியுறத் தாழ்ந்தனம் பரிந்து 130

மற்றதில்வருங் குற்றமே தின்னமுன் மலர்த்தாள்
பற்றியாடலசெப் குறுமியாம் பண்பினினென்ன
வெற்றிவேல் விழி மெல்லியல முறுகுதைவந்து
நற்றிறத்தருள் புரிதலு மாதோன்று நவிலும். 131

தடங்கைவெஞ்சிலைத் தாதையு மன்புறுந்தமரும்
விடங்கலுழ்ந்திடும வேற்படை மறவரும் வெற்பி
னிடங்கடோறுமுற றண்டிய வீரர்களெவரும
அடங்கலுமமெளி யென்பொருட் டாகவந்தனரே. 132

உன்னருந்திறல் தெரிந்திடா தெதிர்த்துயி ரொழிந்தா
ரன்னமாந்தர்க ளுய்யும்வண்ண மருள்புரிகெனலும்
முன்னநாரத முனிவனு மிம்முறை மொழிந்தான்
சொன்ன வண்ணமியான் செய்குது மெனவருள் சுரந்து 133

சண்டமாவெஞ் சினத்தராயம் முட்டனிக்கலை
மாண்டகானவ ரியாவரு முய்கென மனத்திற்
காண்டலும்மவ ரியாவரு மெழுந்தொலி கடல்போ
லீண்டி யெந்தைதா ளிணைமலர் பரவினின் றிசைப்பார். 134

மங்கு றேய்ந்திடும் வரைக்கெலா மன்னவனாகி
யெங்குலத்தினை யிரட்சைசெய் தெய்வநீ யெங்கள்
கங்கணக்கர மடைந்ததையைக் கவர்ந்துகொண் டேகி
னங்குளாரெமக் கென்றுகொள் வாரியம் யேந்தாய் 135

இற்றை நாள்வரை மருவிலா வெங்குலத்தினுக்கோர்
குற்றம்வைத்தனை யினிச்செய லாவதென்குலத்தி
லுற்றகானவர் நட்பினரொருவோர் காணக்
கொற்றநன்மணஞ் செயவினிதருள் கநீ கொள்ள 436

யாங்கள்வாழூழு ரளவும்வந் தெம்மனை யிடத்திற்
பாங்கினன்மணஞ் செய்துகொண் டணாங் கொடும்பரிவா
யீங்குவந்தினி திருக்கலா மித்திரமருளென்
றேங்குதன்கிளை யொடுபணிந் துரைக்கவுண் மகிழ்ந்து 137

அந்தவாறுசெய் குதுமென வாயிறைதமராய்
வந்தகானவர் சூழ்வர யாழில்வல்லவனு
மந்தளிர்ப்பத வணங்குட னெந்தையாங் ககன்று
விந்தமன்னதோர் வள்ளியஞ் சிலம்பின் மேவினரால் 138

எந்தைமன்னைதன் றூதையு மெயினர்கு ழாமுங்
கொந்தலர்க்குழ லெயிற்றியர் குழாங்களுங் கூடி
யந்தமில்லதோ ரற்புத வெள்ளமேற் பொங்கச்
சுந்தரச்சிறு குடியெலா மணிபெறத் தொகுத்தான். 139

மருமலர்க்குழல் வள்ளியை மணவணிசூட்டி
யிருவிசும்புறை வந்திடு மிளந்தளிர் வேங்கை
விரைமலர்ப்பருஞ் சேக்கையின் மீதினிலிருத்தி
வரையெறிந்தவேற் குமரனை வலவயின் வைத்து 140

தெய்வயாழ்முனி மணவினைச் சடங்கெலாஞ் செய்யத்
தையல்தந்தைதவந் தெம்பிரான் றிருக்கரந் தன்னின்
மையல்வேற்கணம் மன்னைதன் மலர்க்கரஞ் சேர்த்து
மெய்ம்மை யாகநங் குலத்துயர் வேலவர்தமக்கு. 141

வேதமாகம முனிவர்க ளெழுவர்கள் வெயயோ
ருதியாகுமுச் சுடர்களும் பூமியந் தரமாந

ன்ள, சுந்தராந்திகழ்ந்த மாதர்கள்யாருந் துதித்திடத்தக்கபே ரொழிலாய், அந்தணாமுத வல்லி சுந்தரமா வல்லியொன மங்கை யர்மாதோ. 7

ஆங்கவரெம்மை யுன்னியேயிந்த நாட்டிடை யரியமா தவங் கள், பாங்குற செடுநாட் செய்தன ரவர்தம பரிவுக ளடியான்ற னிச் சென்று, கோங்குமென் முலைக டாங்குமெல் லியலீர் கூறி டும் வேண்டிடும வரநுக, வீங்கருள் செய்வோர் முளமகிழ்வாக வியம்புதி ரியம்புதி ரென்றேன். 8

என்னலுந்தாழ்ந்து நின்னையாமணஞ்செய் தென்றுநின் னிடத்தினிலிருக்க, வன்னவா கனனே முனிந்திடுமிறைவ வரு ளெமக்கிவ்வர மென்னக், கன்னலின் மொழியீ ரிருவரி லொரு வர் கற்பகநாடதுபுரக்கு, மன்னனிந் திரன்றன் மகளெனவருதிர் மற்றொருபேதையர் தாமும். 9

தீதறுமனத்து முனிவரிற்சிறந்த சிவமுனி யெனப்பகர் கின்ற, மாதவா வெய்ய கானிடையரிய மாதவ முயன்றிருக் கின்று, ளொருமட முனிபாற் செலலுமி னவர்முன் னொருபிணை யெய்துமற் றதன்பாற், காதலகூர்ந்துடனே புணர்குவனந்தக் கண்முழைவயின்வயிற்சென்று, 10

மகண்மையாய்க் குறவ ரிடத்தினிற் சிலநாள் வளர்ந்து செந்தினைப் புனந தனைக்காத், தகமகிழ்வாக யிருத்திர்முன்றே வராதிபன் மகளினை மணந்து, பகருமற்றதன்பின்றினைப் புனங் காக்கும் பாவை தனிடத்தினிற்சென்று, புகலரிதான மாதவி நிழற்கீழ் பொருந்து மெண்மணமதிலரிதாய். 11

பேசுகந்திருவ முறையதாய் மணந்து பின்பு தாய்தந்தை சுற்றத்தார், மாசிலன்னகரார் பற்பல ரறிய வதுவை செய்திடுவம் யாம்நீவிர், கூசிகலாது செல்லுமினென்னக்கூறின மவரிருவோ ரும், நேசமுற் றியாங்க ளுய்ந்தன மென்ன நேரிழை யிருவருஞ் சென்றார். 12

அன்னவாறுக வவதரித்திருந்தா ரியாமவர்க்கந்த நாடன் னிற், சொன்னவர சகத்தின் படிமணந் தின்ப சுகத்தொடுத் தரு

றுகின்றோமா, லென்னவுங் குறவர் குலத்தினில்வந்து விளை விதா னெனத்தெரிந்தயில்வேல, மன்னனைப்பணிந்து யாமொரு பெண்டான் மற்றொருகன்னியெப வென்னா. 13

புவனமோரேழிற் பொருவிலாத் தணிகைப் பொருப்பி டைச் செம்பொனு லயத்திற், குவடெனப்பணைத்த முலையரம் பையர்கள் குளிர்மல ரடிபணிந் தேத்தவல், கவனமாய்ப் புரிய வினி திருக் கின்றாள் காண்குவை நீயுமாங்கவளைத், தவளுநா யிடை யாய் நீவிர்க டவஞ்செய் தொண்டைநா டாகையினாலும். 14

ஆடகமேரு வுச்சியிலெந்தை யருளுடனென்றும்வீற் றிருக்கும் கோடது வாகை யாலுமெம்மன்னை கூறருந் தவஞ்செயலாலுந் தேடருந்துணைவ ரொன்பதோ டிலக்கர் சிறப்புட னுதித்ததனாலும் பீடுறு முனிவ னகத்திய னம்மைப் பெரிதருந் தருச்சனைபுரிந்து.

இங்கிருந்தென்று மடுத்தவர்க் கெல்லா மிம்மையிற் றனத னல் வாழ்வு, மங்கலவத்தத்தி லிலையின் முத்தியும்வீ யருளென வேண்டுதலாலு, மெங்குள நகர்க்கு முத்தமநகரா மிந்நகராகையினாலும், பங்கமில் சித்த ரெண்ணிலர் வந்து பரவியங்குறை தலினாலும். 16

ஒருங்கண மேனு நீங்கலன் விசும்பி னூடளா விச்சிவமலை யைப், பொருவிலிச் சயிலந் தெரிந்திடு மனவும் புண்ணிய பூமி யாமிதனில், பரிவுட னன்ன தானமாதிகளோர் பவுண்டரீகம் மு தன்மகமுற, தெரிவுறச் செய்பி லன்னிய தலத்திற் செய்பலன் றனிற சகத்திரமாம். 17

இம்மலையிடத்தி லெண்மையரிச் சிப்போ ரிந்திரபோகமார்ந் துள்ளச், செம்மையராகி முத்திசேர்ந் திடுவர் சிறந்திடு மித்தல மதனில், அம்மலர் பூங்கா நந்தன வனங்கள் வைத்தவ ராலயங்க ண்டோர், விமலிதக்கனகப் பணிகள்செய் திட்டோர் விளாதில முதலினோ ரின்னும். 18

பகரபிடேக நிவேதனஞ் செய்வோர் பத்திமை யுடனதில் வசிப்போர், புகரிலம்மலையை வலம்புரிந்திடுவோர் போற்றியே நண்பித் தெரிசிப்போர், சகஸ்ரவதுமோர் குடைநிழறனி

லாள் சக்கிரவர்த்தி மன்னவராய்ச், கோபங்கள்சேர் கயிலை மாமலையிற் சிவகணத் தலைவர்களாவார். 19

வேறு:-என்றுகூறிய வினையிலெம்பிரான்; றன்றுணை பகழ் தாழ்ந்து போற்றியே, மன்றவார்குழல் வள்ளிகூறுவாள, நன்ற தாகுமின் னுட்டில்யானுமே. 20

அறமியற்றிட வானதோர்பதி, யிறைவகூறென யிரங்கிக்கூ றலும், கறையயிர்ப்படைக் காண்மகிழ்ந்துசெய், நிறைபருநதி நிகர்க்குங்கற்புடை. 21

தேவி வள்ளிதன் றிருக்காம்பிடித், தோவியம் மெனவுருவ முற்றுமே, நீவிவாஞ்சையி னிகழ்த்துவான் முன்னுட், டாவிலரப் புகழ்தழைக்குவகாஞ்சியில. 22

ஐயையாகுமம் மன்னையிவ்வுல,குய்யுமாறுசால் போன்றுந லெட்டு, மெய்ம்மைநல்லறம் விரும்பிசெய் முறைச,செய்யவலலை யோ வெனவுஞ் செப்பியே. 23

வேறு:-இந்தமலைகருப் பூர்வ திக்கதனிலிளமரக்காக்
கந்தமலர்ப் பூஞ்சோலை கடிகமழ் தாமரைபோடை
யநதமிலா வளஞ்செறியுமறைசை யென்னும் பதிசென்று
சிந்தையுட னற்றருமஞ் செய்திடென முகமலர்ந்து. 24

சுமையுடன்குற் றேவல் செய வயுதம்விண்ணவர் மகளிர்
தமையுமுடன் கூட்டியங்க ணேகெனவுந் தாணபுகன்றங்
குமைமகன்வீற் றிருந்தனமற் றெண்டொடியவவாறு சென்று
விமலமுடை யறச்சலூர் மேவியங்கணினிதிருநது. 25

இளங்குழவி தலைகருதமேய்த திடவெண்ணையருந்திடப்பால்
வலங்குலவு மறுசுவையூன வநதாகள் பசிதீர
உளம்பொருநதித் துயில்கூற வொண்டொட்டிற் கட்டில்மெத்தை
சளஞ்செய்யும் பலபிணிகள் தவிர்த்துய்ய வருமருநது. 26

வாட்டுபொருந் தாகவிடாய் மாற்றமலர் பாதபூக்
கூட்டுநறுந் தெண்ணீர்மெய்க் குளிர்க்காட் டுப்பாற்ற
வீட்டுவெட்டிவேர்விசிரி விணைப்புரத [illegible]
பட்டணிகள் துறைத்துபண்செய் பனி[illegible] விடப்பின்றும்.

பார்வமனும் முதல்வியிந்தப் படியறம்பண் ணுட்புரிந்து
வரிவிழிச்சிற் றிடைவள்ளி பாதிருக்குயப்போது
விரிசடர்வை வேற்கரச்செவ் வேள்சிவமா வெற்பிலிருந்
தொருபசுந்தோகையிலேறி யொண்டொடிபாற்சென் றணைந்தான். 28

தன்பன்னி வள்ளிபுரி தருமமெல்லாம் பார்த்துமகிழ்ந்
தன்பினொடு நீபுரியு மறங்கண்டு மகிழ்ந்தனமயா
மின்பமொடு வேண்டும்வரம் யாதுபுகல் தருதுமென
மின்பயில்வே லவனுரைக்க மெல்லியல்தாழ்ந் திவையசொல்வாள்.

வேறு:-நம்பினர்க்காக் குந்தெய்வ நாயக வெனையாளைய்யா
வைப்புனத் திடைவந்தென்னைப் பரிந்துமே வியதால்யான் முன்
கும்பிடுந் தேவரென்னைக் கும்பிடப் பெற்றேன்மற்றும்
அம்புயந் தன்னிற்பூந்தா ரணிந்தரு கிருக்கப்பெற்றேன். 30

இப்பெரு மிதங்கள் யாவு மிறைவநீ தந்திருக்க
மெய்ப்பெரு வரங்கள்வேறு வேண்டுவ துண்டோவிந்த
மைப்புய லுறங்குங் காச்சூழ் மல்லலம் பதியம்பேர்கொண்
டெப்புவி யோருஞ் சொல்லி யிசைபெறத் தருதியென்றாள். 31

அள்ளிலைவே லண்ணன்மகிழ்ந் தாயிழையாள் முதுகுறைதவத்
தொள்ளிழையா ளிப்பதிதா னுன்பெயரால் விளங்கவென்றான்
விள்ளரசு னூரென்று மெய்ந்தகருக் கன்றுதொட்டு
வள்ளியறச் சாலையென மற்றதன்பே ரானதுவே. 32

எந்தைபிரா னெய்வரமீந் திறைவியொடு மயிலேறி
மந்தரமா வெற்புநிகர் வந்தகணா யாசலஞ்சென
றிந்துநுதற் பேதைதெய்வயானையைக்கண் டுருபாலும்
பைந்தொடியா ரிவர்களுமிருந் திடப்பன் னுளிருந்து 33

தேவியா ரிருவரொடுஞ் செவ்வேள்பொன் மயிலேறித்
தாவிறிருத் தணிநீங்கித் தரியாமற் சிவமலையைத்
தேவனகண் மாதருட னினிதிருக்கு மெல்லைதனிற்
றேவருக்காய் வேலையுண்ட திருமுனிவ னங்குவந்தான். 34

அத்திமுகற் கிளவலையு மன்னையர்க ளிருவரையும்
பத்திமையாய்த் தாழ்ந்திறைஞ்சிப் பரம்னூர் குரவனின்னே

யித்தினமும் யான்பூசித் திடவேண்டு மெனவேண்ட
வத்தனுமம் மனையரு மணியுருவிற் புக்கிருந்தார். 35

விந்தமடக்கிய முனிவன் மெய்யாக முன்முறையாய்க்
கந்தனையு மங்கவன்றன் காதலிமா ரிருவரையும்
புந்தியுடன் பூசித்துப் போற்றியெந்தை விடைபெற்றுச்
சந்ததமும் வீற்றிருக்குஞ் சந்தவெற்புச் சேர்ந்தனனால். 36

வள்ளிநாயகி தருமஞ்செய் சருக்கம் முற்றிற்று

## தீர்த்த மகிமைச் சருக்கம்

வேறு:-கரிய வண்விழி தனில் வருங் காரிகைவள்ளி
பரிவினோடுநல் லறப்புரி செய்கையைப் பகர்ந்தேந்
தெரிய மாமுசு குந்தற்குக் கோதமன் செப்பு
மரியதீர்த்தத்தின சிறப்பையுந் தெரிந்தவா றறைவாம். 1

வேறு:-கருணையந் துறையுணர் கல்விக்காகரம்
பொருவரு தருமத்தின வேலி போர்மக
டிருவிருப் பாகிய புயத்தன் செல்வத்தி
னிருநிதித் தனதன்மெய் யெழிலின் மாரவேள் 2

தருவினை யிகழ்வுசெய் சலசச் செங்கையான்
பொருதிரை வாரிதி போலுஞ் சேனையா
னொருகுடை நிழலிற்கோ லோச்சு மாணையான்
பெருமைகொண் முசுகுந்த னென்னும் பேரினான் 3

நிகரறு மனுநெறி நடத்து நீதியா
னிகல்வலி யசுரர்மே லெதிர்த்து வெங்கண்டு
மிகமக பதிக்குநல் வெற்றி தந்தவன்
சகமலி யுயிர்க்கன்னை தந்தை போல்பவன் 4

வேறு:-கலியிருடுறந்து நல்லறம் வளர்த்துக் கறைமிடற்
றண்ணலைச்சரபி, யொலிகெழு மனுநூலா டருச்சனைபுரிந்த வுயா
வஞ்சி நகரின்கண் வாழ்நாள், வலிகெழு புலன்களைந்தையும
வென்ற மாதவக் கோதம முனிவன், மலிபுகழ் படை தத மாமு
சுகுந்த மன்னவன் றனைவந்து கண்டான் 5

அஞ்சலிசெய்து முகமனன் குரைத்தோ ராதனமிட்ட ரச
சித்துக், கஞ்சமாமலர்வாழ் நான்முகனிகர்த்த கடவுணன் முனி
வவெங்கெந்த, சஞ்சரித்திங்கு வந்ததென் னென்ன ... சா
முசுகுந்தன்வினவ, நெஞ்சகத் தானை யன்றிவேறிலையுற நிமல
மா முனிவானிகழ்த்தும். 6

வேறு:-கங்கைமுதலுலகிலுள்ள தீர்த்தமியாவுங் கண்டுபடிந் தாடிமிக்க கருணையொடும், தங்குபாபத்தையமனக் கவலைதீரத் தாழ்ந்திறைஞ்சவிங்குவந்தேன் சதமகன்மேற், பொங்குகட லெனச்சூழ்தானவர்களாரும் புறங்கொடுத்தோடப் புரிந்த புகழோ னென்றான், புங்கமிகு புசகுந்தக் குரிசிலுள்ளம் பூரித்து மகிழ் வினொடுபுகலுவானால். 7

பாரில்வரு தீர்த்தத்திற் றோய்பவரெய்தும் பலன்களென்ன வென்று மன்னன் பகரக்கேட்ட, சீரியநன் முனிசொல்வான் பல ன்களொன்றோசித்தத்தி னினைந்ததெல்லாஞ் சிறக்கநல்கும், வா ரிசன்மான் முதலான கடவுளோரு மாதவரு மாந்தர்களும் மற் றுளோரும், பேரியலு நன்னதி கடன்னிற்றோய்ந்து பெற்ற பே ற்றினையளந்து பேசலாமோ. 8

என்னனுமியான் கொண்டகுன்ம வலியினோயை யெத்தீர் த்தந்தோய்ந்திடிற் றீர்த்திடுஞ் சொல்லென்று, மன்ன னுரைத் திடலு முனிவரன்கைத்து மாறுதசனனநோய் மற்றுந்தீர்க்கு, முன்னவரிதாந் தீர்த்தம் பலவாங்கோடி யுண்டதனிற் சிறந்தது வுமுரைக்கமுற்று, தென்னிலுமிப் பதிப்பச்சி மத்தின்வீரை யென்னுமொரு தலமுளதத் தலத்தினூடே. 9

செப்பரிய தீர்த்தங்கள் பலவாமந்தத் தீர்த்தத்திற் சிறப்பு டைய தீர்த்தமேழா, மொப்பரிதாங் கங்கைதன்னிற் பொன்னித ன்னிலுததிதனி லாறிரண்டாண்டுக்கோர் நாளின், மெய்ப்புரு மந்தாகினிதோய் மகதீர்த்தத்தின் மேலாகு மதிற்படிந்தோர் விருப்பமாகு, மெய்ப்பொருளும் பெறுவர் சிவபதவிசேர்வ ரெ ன்னிலதன் பெருமையவ ரியம்புவாரே. 10

அந்தமகா தீர்த்தப்பேர் சத்திதீர்த்த மகத்தியதீர்த்த மோங்கு மனுமதீர்த்த, மிந்திரதீர்த் தம்பரமானந்ததீர்த்த மிய ப்பிடமங் மலதீர்த்த மிணையிலாத, வந்தவினை தவிர்வீர தீர்த்த மென்ன வகுத்தவெழு தீர்த்தமொடு மாலினுந்தி, வந்தவயனுதி யாத் தீர்த்தந்தன்னில்*மகிழ்வொடுதோய்ந் தவர்பெற்றமகிமை சொல்வாம். 11

வேறு:-பண்டொரு வைகறன்னிற் படைப்பயன் மறந்துநீல
கண்டநல் லருளினாலே கருதருமறிவுவந்து
தண்டருங் கமலப்பூத்த சத்தியா தீர்த்தந்தன்னைக்
கண்டதின் மூழ்கிவேதங் கலைகண்டுவிதிப்புங் கண்டான். 12

மாதவன் விடத்தையூட்டி வன்முலைப்பாலைத்தந்த
பூதனை தன்னைக்கொன்ற பொருட்டுறு விடாதபற்றுத்
தீதினை யகற்றுஞ் சத்தி தீர்த்தத்தின் வந்துமூழ்கிப்
பாதக மனைத்துந்தீர்ந்து பழம்பதித் துவரைபுக்கான் 13

அகத்திய தீர்த்தந்தன்னி லறத்தனு நிருதிதோய்ந்து
மகத்துவ மிகுந்தோர் திக்கின் மன்னனானான் பாரிற்
புகழ்ப்பெருக் குடையகாதி புதல்வனு மதிற்படிந்து
சகத்தியல் கடந்து நின்ற தவர்கள்தன் றலைவனானான் 14

பொன்னுல கிறையாயங்கு போந்திடு நகுடமன்னன்
பன்னகமாகித்தீராப் பழிபெறுங் கொடியசாபஞ்
சொன்னவித் தீர்த்தந்தன்னிற் றோய்ந்துதன் சாபநீங்கி
மன்னுல காண்டுவெள்ளி மலைச்சிவ கணங்களானான். 15

அருவினை முழுதுந் தீர்க்கு மருமமன்மா தீர்த்தந்தன்னிற்
றருமனோடைவர்மூழ்கித் தரியலர்ச் செகுத்துவாச
மருமலி வாகைசூடி மண்ணுல கதனையாண்டு
திருமலி தேசமன்னர் திறைதர வாழ்ந்தார்மன்னோ 16

இந்திர தீர்த்தந்தன்னி லியம்பரும் பாண்டுமன்னன்
வந்ததின் மூழ்கிப்பாண்டு வலிபிணி தீர்ந்துவாழ்ந்தான்
மந்தர வரைக்குத் தாம்பாம் வாசுகி தானுமூழ்கி
முந்துமெய் குன்மநீங்கி முடியாத வின்பமுற்றான், 17

சீதமார் பரமானந்த தீர்த்தத்திற் சிலர்பின் வந்த
மாதர்கள் மூழ்கிச்சேற்கண் மலைமகள் சாபநீங்கி
மேதகு மிலக்கத்தொன்பான் வீரரைப் பயந்துவெள்ளிப்
பூதரந் தனிலெம்மன்னை பூபதத் தடிமை பூண்டார். 18

சித்தர்கள் பல்லோர் மூழ்கிச் செங்கதிர்த் தேசமேவி
மெய்த்தகு முகமயல் கண்டு வீற்றினி திருந்தார் மற்றுஞ்
சத்திய வாணமூழ்கிக் கன்றினை வேண்டியுற்றார்
பத்தர்கள் பலபேர் மூழ்கிப் பரகதியுற்றார் பின்னும். 19

இயம்புமக் கலதீர்த்தத்தி லிரதிதோய்ந் தெரிக்குமாரன்
வயம்பெறு மாவியுய்ய வரங்கொண்டின் புசுகங் கொண்டாள்

தயங்கிய வீரதீர்த்தந் தனிற்சுக்கி ரீவன்றோய்ந்து
செயப்பெறு மிராமனட்பாய்ச் சென்றுதன் பகையைவென்றான்
இவ்வெழு தீர்த்தந்தன்னு ளியாதொன்றை விழிபாற்காணிற்
செவ்விய காத்தார்நீண்டிற் றோய்ந்திடுஞ் செல்வங்கல்வி
கல்வையுங் கலமேபெற்றுக் கருதுபல் போகந்துய்த்து
வெவ்வினை பலவுநீங்கி வீட்டின்ப முறுவரன்றே 21

சொன்னவிவ் வெழுதீர்த்தத்துந் தோய்ந்திடி லுலகிலுள்ள
பன்னருந் தீர்த்தந்தன்னிற் படிந்திடும் பயன்வந்தெய்தும்
தன்னிக ரில்லாவந்தத் தடத்தினிற் றென்புலத்தோர்க்
குன்னருங் கடன்களாற்றிச் சிவலோக முறுவரன்றோ. 22

நன்னுமத் தடத்திற்றோய நடந்திடி னடியொன்றுக்குத்
தின்னமாம் வாசமேயஞ் செய்பலன் றருமென்றாலப்
புன்னிய தீர்த்தம்போலப் புவனமேமார் றோன்றி னுள்ளதும்
எண்ணில்மற் றுண்டோவெங்கு மிணையில்லா தீர்த்தமாமே. 23

மன்னவ நீயங்கெய்தி வாசவ தீர்த்தந்தோயி
னில்லாத பிணியுமென்றும் நீங்கரும் பிரமநோயு
மின்னவை யாவுந்தீருமெழுதீர்த்தத்து மூழ்கிற்
பின்னரியான் சொல்வதென்ன பேருலகாண்டு பன்னாள். 24

இந்திர யோகபோக வின்பவெள்ளத்தின் மூழ்கிச்
சந்திர சேகரன்றன் றாணிழல் குறுகுவாயென்
றந்தமில் முனிவன் சொன்ன வரசனற் புதத்தனாகிச்
சிந்தைநன் மகிழ்ச்சிபொங்கச் சிவாசலந் தன்னிற் சென்றான். 25

மகபதி தீர்த்தப்பாங்கர் வந்ததின் மூழ்குமுன்ன
மிகவுமெய் வருத்தஞ்செய்யும் வெங்குன்மப் பிணியுநீங்கிப்
புகழ்கொள்வேறுருவம் பெற்றான் பொருவின்மற் றையதீர்த்தத்து
மகமிகு மார்வத்தோடு மாடினற் பதனிலெய்தி. 26

அண்டர்கள் யாரு முய்ய வாழிநஞ் சயின்றநீல
கண்டனை யவ்வ்பால் வைகுங் கருணைசே ருமையை மாலைத்
திண்டிறற் றுறைக்காய்ந்த சேந்தனை யிருபாலமைவுற
பண்டருபொழிமினனைப் பணிந்துமெய்த் துதிகள்கூறி 27

வேண்டிய வரங்கள் பெற்று மீண்டுதன் கருவூரெய்தி
யீண்டுல காண்டுபின்னு ளிருவரு மறையும்பணாட்
டேண்டியுங் காணவிந்து சேகரன் வீற்றிருக்குஞ்
சேண்டோடு கயிலைதன்னிற் சென்றுநற் கணமதானான். 28

வேறு:-இன்னதன்மைய சிவன்மலை யியல்பை
பன்னுகோடியி லொன்றியாந் தெரிந்ததை பகர்ந்தே
மன்னவாகன னிகர்த்திடு மருந்தவமுனிவீ
ரென்னவோதிய காதையை வினவின ரெவரும். 29

வேறு:-மெய்ப்புளகரும்ப மொழிதடுமாற விழிகள்நீர் துளி
ததும்ப சிரமேற், கைகுவித்த தயிலவேற் கைத்தல வேந்தைக்
கமலமா மலர்ப்பதம் நெஞ்சிற், றைவர விருத்திப் பரவசமடை
ந்து தணிவிலா வற்புதமெய்தி, ஐயனுஞ் சூதமுனிவனையருச்சித்
தடிபணிந் தினியனகூறி. 30

வானளாவளந்த வுயர்சிவாசலத்தின் மகிமையைச் சொற்றிட
வினவி, யீனமாருடல மெடுத்திடும்பயன்கள் யாவையுமின்றினி
தடைந்தேம, தூநிலக் தவிற தேவரில் நினைபோற் சுருதிநூல்
பலவுமா ராய்ந்து, தேனமு தேய்ப்பச சொல்வரா ரென்னத்
திருத்தகத் துதித்தினிதிருந்தார். 31

வாழி.

புவனி வாழ்கப புயல்பெய்க நல்லிறை
மவுலி வாழ்க வளரற மோங்குக
உவமை யின்முறை யோங்குக தொண்டர்கள்
பவமுறுமருடபன்னிப்பாவவே 32

தீர்த்தமகிமைச் சருக்கம் முற்றிற்று.
சருக்கம 14க்கு,
விருத்தம், 497.

---

சிவமலைப் புராணம் முற்றிற்று.



முருகன் துணை.

# சிவமலைப் புராணச் சுருக்கம்.

## காப்பு.

சீரிலகு மதிவேணிச் சிவபெருமா னயனின்று
நீரிலகி யறுமாதர் நிரம்பவளர்த் திடவுமையாங்
கூரிலகு மயிலேந்திக் குறைநீக்கி மயிலேறித்
தாரிலகு மணமேவுந் தற்பரன்பொற் பதந்துணையே.

கடல்சூழ்ந்த இந்நிலவுலகில் நல்லபுண்ணிய தீர்த்தங்கள் நிறைந்ததும், திவ்வியமான புஷ்பங்களாலும், பழங்களாலும் பரிமள நிறைந்துள்ள அடர்ந்த சோலை சூழ்ந்ததுமானது நைமிசாரணியமென்னும் ஒருபுண்ணியக்ஷேத்திரம். சூரிய சந்திரர்களது கிரணங்கள் புகாது மரங்களால் அடர்ந்திருப்பதால் குளிர்ந்து இருள் செறிந்து விளங்கும். அங்கங்கே உள்ள நாகரத்தினங்கள் விளக்குகள் போலவிளங்கும். மூன்றாம்பிறைச்சந்திரனைச் சடைமுடியிலேதரித்த சிவபெருமானை யன்றி மற்றொரு கடவுளுண்டு என்றுநம்பிவணங்காத சிந்தையுள்ள மாதவர்களின் கூட்டங்களே அங்கங்கு நிறைந்திருக்கும். ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினேயம் என்னும் அக்கினிவளர்த்து ஓமம் வளர்ப்பார்கள். அந்த ஓமத்திற் சொரியும் பால் நெய்யால் எழும் புகையை மேகமெனநினைத்து மயில்கள் தங்கள் பொற்சிறைகளை விரித்து நடிக்கும். அங்குள்ள பார்ப்பார்கள் சொல்லும், வேதம், ஆகமம், புராணசாஸ்திரங்களை எப்பொழுதுங் கேட்டிருக்கும் கிளியும், பூவையும், வாக்கியமும் அர்த்தமுந் தவறாமற் சொல்லும். அங்குள்ள மிருகமும், பக்ஷிகளும் தருமநெறியில் ஒழுகவேமுயலும். புலாலுண்ணுவதால் நரகத்தை யநுபவிக்க வேண்டுமென்று தெரிந்தோ! அல்லது முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையுமென்னும் வாக்கியமுள்ளதால், இந்தப் பிறப்பில் இப்பொழுது நம்மாற் கொல்லப்பட்ட உயிர் பின்னொட்டு நம்மைக்கொலைசெய்யுமென்று நினைந்தோ மற்றெந்தக் காரணத்

தாமலா பூனைகளும் அந்த க்ஷேத்திரத்தில் புலால் அருந்துவதில்லை. மற்றையுயிர்களிடத்து அன்பு பாராட்டும். மாயவன் மனைவி சீதேவிக்கும், பிரமன்தேவி சரசுவதிக்கும், வசிட்டர் பத்தினியாகிய அருந்ததியம்மனுக்கும், கற்புலக்ஷணங்களைத் தெரிவிக்கவல்ல தவசிரேஷ்டர்களது பத்தினிமார்களின் கூட்டங்கள் விளங்கி இருக்கும்.

இதுவன்றி பாம்பின் படத்தின்மீது எலி ஏறிவிளையாடும், மான்குட்டிகள் பயமின்றிப் புலிமுலையில் பால்குடிக்கும். குரங்குகள் நண்டிடத்துச் சிநேகங்கொண்டிருக்கும். சிங்கக்குட்டிக்கு யானைதும்பிக்கையால் தண்ணீர் அள்ளியூட்டும். பருந்துடன் கிளி ஒருகூட்டில் வசிக்கும். இப்படி ஜாதிப்பகையுமே இல்லாது சாந்தாகாரத்தைத் தருகின்ற அந்தத்திவ்ய பூமியிலே மோக்ஷத்தை பெறவேண்டுமென்ற எண்ணமுடையவர்களாய்ப் பஞ்சாக்ஷரமன்றி வேறு மந்திரமும், விபூதி, ருத்ராக்ஷமன்றிப் பிறபூஷணங்களும் பூணாதவர்களாய் சிவசுப்பிரமணியக்கடவுளாரது திருவிளையாடல்களைப் புகழத்தக்கவர்களான பெரியோர்கள் செழித்திருப்பார்கள்.

இவ்வித மேன்பாடு கொண்டுள்ள தவசிரேஷ்டர்களின் மத்தியில், ஸ்ரீநீலகண்டப்பெருமானின் திருவடிகளைச்சந்ததஞ் சிந்தைசெய்து கொண்டுள்ள சூதமுனிவர், வேங்கைத்தோல் விரிப்பின்மேல் வீற்றிருந்தனர். அந்தச சூதமுனிவரை முனிவர் குழாங்கள் வந்தனை செய்து ஐயா, வேதியருள் பிரமத்தவனைப் போன்றவரே! உலகத்தில் சனனத்தொல்லை நீக்கத்தக்க சிவதலமான்மியங்களைப்பல திருவாய் மலர்ந்தருளினீர்; அவற்றைக் கேட்டு எங்கள் தீவினை நீங்கி மனச்சுத்தம் பொருந்தினோம். ஆயினும் எல்லாத்திசைகளிலுமுள்ள சகல தலங்களிலும், சிவசண்முகப்பெருமானுக்கு இனிதாய், அந்தக் கந்தபரன் எப்பொழுதும் நீங்காது வசிப்பதாய், எந்தக்காரணங்களாலும் மற்றொன்று, இத்தலத்துக்கு ஒப்புள்ளது என்று சொல்வதற்கில்லாது விளங்கத்தக்க ஒரு தெய்வீகத்தலத்தை எளியேங்கள் கடைத்தேறும் வண்ணம் சொல்லியருளல் வேண்டுமென முனிவர்கள்

வேண்டுகனும், பிரம விஷ்ணுக்களால் காணப்பெறாத பரம சிவத்தின் பாதாரவிந்தங்களை சிந்தித்துச் சொல்லத்தொடங்கினர்.

அளவிலடங்காத விரிவான காந்தமகாபுராணத்து ஆறுசங்கிதைகளில் ஈசான சங்கிதையில் மூர்த்திதல தீர்த்தங்களில் விசேஷமாகக் கூறப்பட்ட ஒப்பற்றதலம் இதுவென்ன மனத்திற்றேறி, தேகம்புளக முறக்கண்களில் நீர்ததும்ப நாக்குளற இரண்டு கைகளையுஞ் சிரசின்மீது கூப்பி, சிவசுப்பிரமணியக்கடவுள் பாதங்களை மனதில் தியானித்துச் சொல்லத்தொடங்கினார் சூதமுனிவர்.

## சிவமலை.

பூர்வ காலத்தில் நெற்றிக்கண்ணையுடைய பரமேசுரர் திரிபுர அசுரர்களைக்கொல்லும் பொருட்டு வாசுகியை நாணியாகக் கொண்டு, வில்லுக்காக மேருகிரியை எடுத்து வளைக்கும் பொழுது அந்தப்பொன்மலையிலுள்ள பல சிகரங்களில், சிவபெருமானுக்கு மிகவிருப்பமாக உள்ள ஒரு கொடுமுடி இவ்வுலகத்தில் விழுந்தது. அதனால் அந்தமலையைச் சிவமலை என்பார்கள். அது முதலுகத்தில் பொன், இரண்டாமுகத்தில் வெள்ளி, மூன்றாமுகத்தில் செம்பு, நான்காவதான இந்த கலியுகத்தில் கல் ஆதலால் இந்தப்படி மாறுவதால், காமரூபஜோதி கிரியென்றும் ஆன்றோர் கூறுவார்கள். இதுவே அன்றிப்பற்பல ஏதுக்களால் அம்மலையானது, சிவனைப்போலவும், மாயவனைப்போலவும், பிரமனைப்போலவும், விநாகனைப்போலவும், சுப்பிரமணியனைப் போலவும், இந்திரனைப்போலவும், விளங்கும். உயரத்திலும் வளப்பத்திலும் ஒப்பற்ற சிவமலையென்று உள்ளமுருகித் திடபத்தியான நம்பிக்கையுடன் சொன்னால் தீவினைகள் நசிக்கும். லட்சுமிகடாக்ஷம் வரும், புண்ணியமுண்டாம் சித்திகள் கூடும். அந்தக்கிரியை ஒருதரம் சுற்றினவர்கள் அரசராவார்கள். இருதரம் சுற்றினோர் இந்திர பட்டம் பெறுவார்கள். மலைமீதேறிக் கந்தப்பெருமானைத் தரிசித்தவர்கள் பிரமபதவி பெற்று சிருஷ்டித்தொழிலை நடத்துவார்கள். உலகத்தில் காசிமுதலிய தலங்களிற் செய்கின்ற விரதம், பூ[illegible]முதலியனவைகளை இங்கு செய்

தால் விசேஷபலனுண்டு. கார்த்திகைநட்சத்திரத்தன்று தரிசித்தோர் உத்தமமான பலனை அடைவர் என்பது நிச்சயமாகும்.

## சத்திமலை.

இமயமலையரசன் தவபுத்திரியாக அவதரித்த, பார்வதிதேவியாரை மணம்புணர்ந்த பரமேசுரன், உமாதேவியாருடன் கைலையங்கிரியடைந்தனர் ஒப்புவமையற்ற கோவிலுள்ளே சேர்ந்தனர். யாவரினும் உள்ளே ஒருவரையும் விடவேண்டாமென்று நந்திகேசுரனுக்கு கட்டளையிட்டுப் பார்வதிதேவியோடு திருவிளையாடல் புரிந்து கொண்டிருந்தனர். சூரபன்மன் முதலிய தேவர்கள் ஒருங்குகூடிக் கைலயங்கிரி சேர்ந்து தங்கள் வரவைப் பரமேசுரருக்கு விண்ணப்பமாக்கும்படி நந்திகேசுரரைக் கேட்டுக் கொண்டார்கள் இப்பொழுது உள்ளே போகக்கூடாது நீலகண்ட பரமேசுரர் உத்தரவு என்று கூறினர். தேவர்கள் தங்கள் குறைகளை முறையிட, பரமேசுரர் நந்தியை அழைத்துத் தேவர்களை உள்ளே விடக்கட்டளையிட்டனர். தேவர்களே! ஒப்பற்ற ஒரு குழந்தையைத் தருவேன் அக்குமாரன் வெகுசீக்கிரத்தில் தோன்றி அசுரர்களை வேரறுப்பன் பயமின்றிச்செல்லுங்கள் என்றனர் தேவர்கள் சந்தோஷத்துடன் தம்மிருப்பிடம் சேர்ந்தார்கள் ஐமுகக்கடவுளாகிய எம்பெருமான் ஆறுமுகத்துடன் வீற்றிருந்தனர். ஆறுமுகங்களினின்றும் அக்கினிப்பொறிகள் தோன்றின. அவற்றை வாயுதேவனும், அக்கினிதேவனும், ஏற்றுக் கங்கையில் விட்டார்கள் ஆறுகுழந்தைகளாயின. இதனைக் கேள்வியுற்ற பார்வதிதேவியார், இத்தனைகால மிருந்தும் பயமிட்டது மகவில்லை சய்விக காது கண்வழியாகப் பரமசிவனை வருத்தங்கொண்டனர். எழுந்து நடந்தனர் அக்கேவியார் பாதத்தில் அணிந்துள்ள ரத்தினங்களை சிவபெருமான் நோக்கினர் நவரத்தினங்களிலிருந்து சிறந்த வடிவுடன் ஒன்பது பெண்கள் தோன்றினார்கள். அப்பெண்கள்மீது உருத்திரமூர்த்தி நோக்கப்பட்டது. அப்பெண்கள் கருப்பமானார்கள். இதனையுங்கண்ட எம்பிராட்டியார் கோபங்கொண்டவராய் பெண்களைப்பார்த்து நீங்கள்

கொண்டகருப்பம் குழந்தை பெறாது இருக்கக்கடவீர் எனச்சபித்தனர். உடனே கயிலையங்கிரியைவிட்டு நீங்கி நடந்து சிவமலையை அடைந்து அரியதவம் செய்து கொண்டிருந்தனர். கருவெளிப்படாது வருந்திய தேவமாதர்களும், பரமசிவத்தினிடத்து அடைந்து வணங்கி எம்பெருமானே! உமாதேவியார் இட்டசாபத்தால் வருந்துகின்றோம் பிரசவிக்கும்படி அநுக்கிரகஞ்செய்யவேண்டுமென வேண்டினார்கள். பார்வதிதேவி கொடுத்த சாபத்தை ஒருவராலும் நீக்க ஒண்ணாது, அம்மையார் சிவமலையில் எழுந்தருளியிருக்கிறார், அங்குப்போய் அடிபணிந்து சாபத்தைப் போக்கிக்கொள்ளுங்களென அனுப்பினர். அந்த உத்திரவு பெற்ற மாதர்கள் சிவமலையை அடைந்து பார்வதிதேவியாருக்குப்பணிவிடைசெய்துக்கொண்டிருந்தார்கள். பிராட்டியாருடைய கோபத்தைத் தணிக்கவேண்டுமென்ற சிவபெருமான், கைலையங்கிரியை நீங்கிக் கொங்குமண்டலத்துள்ள சிவமலைக்கு எழுந்தருளினர். காளகண்டம், திரிநேத்திரம், சடை, பிறை, கங்கை முதலியவற்றை மறைத்து, நல்லவடிவமைந்த மன்மதவடிவாகத் திருநீற்றொளி விளங்கப்பாதுகை, யோகபட்டிகை, தண்டு முதலியனகொண்ட தவவடிவினராய்த் தேவியார் முன்தோன்றினர். தேவியார், வந்ததவசியை ஆதனத்தில் எழுந்தருளச்செய்து ஐய, எந்த நாட்டினின்று என்னகாரியநிமித்தம் இங்கு வந்தீர்கள் எனவினவினர்.

கயல்போன்ற கண்களையுடைய பெண்கள் நாயகமே! எந்த நாடும் எந்தப்புவனமும் எமக்குச்சொந்தம், என்றாலும் மேருமந்தரகிரிக்கு வடபாகத்தில வசித்துள்ளோம்; ஒப்பற்ற மகிமை கொண்ட ஒருபுத்திரனைப்பெறவேண்டி. அதற்காக ரதிலட்சுமியைவென்ற அழகும், அருந்ததி கற்பும் பொறுமையும் சீலமும் உயிர்களிடத்தன்பும, தர்மகுணமும், ஈகையும், தவகுணமும், மங்கைப்பருவமுமுள்ள ஒருகன்னிகையைத் தேடினேன்; கிடைக்கவில்லை. ஆனால் நீ செய்ததவமோ, எனது சுபதவமுகூட உன்னைக்கண்டேன். என்ற மொழிகேட்டவுடன் சிவ! சிவ!! என இரண்டு காதுகளை மூடிக்கொண்டு அவ்விடத்தைவிட்டு இரண்

டடி உமையவள் எடுத்தணைக்குமுன், காளகண்ட திரிநேத்திரதாரியாய் விருஷபவாகனமீது தோன்றினர். உமையவள் கையைப் பிடித்துக்கொண்டு, உன்னுடன் கூடுமானந்தம் உள்ளடங்காமற் பொங்கி எம் கண்ணின்வழி அக்கினிப்பொறியாக வந்தது. உன்னையன்றிக் கந்தன் எப்படிவருவன்? அந்த ஆறு பொறிகளும் ஆறுகுழந்தைகளாகச் சரவணப்பொய்கையிலிருக்கின்றன. அந்தக்குழந்தையைப் பார்ப்பாயானல் உன் தனபாரத்தில்பாலூறுமென்றனர். இந்தமலையில் நீ அருந்தவம் செய்தமையால் இக்கிரிக்குச் சத்தியமலை யென்று இனிப்பெயர்விளங்கும் என்றுகூறி விடபவாகனத்தில் பார்வதியையும் ஏற்றிக்கொண்டு கைலாயம் சென்று, சரவணப்பொய்கைக் கரைசேர்ந்து குழந்தைகளைப் பாரென்றனர் பரமசிவம். மலைமகளும் குழந்தைகளை ஆவலோடு சேர்த்து எடுக்கவே, ஒருடலும், ஆறுமுகமும், பன்னிரண்டுகைகளுமான திருவடிவமாக விளங்கினர் சுப்பிரமணியர். துடையின்மீது அவ்விளவலைவைத்து பொன்வள்ளத்தில் தனதுதனபாரப்பாலைச்சொரிந்து ஊட்டித்தனக்கும், தன்மணாளனை சிவபரஞ்சுடருக்கும் இடையே இந்த கந்தப்பெருமானை வைத்தருளினர். தேவர்கள் ஆரவாரித்தார்கள். தேவர்கணங்கள் தோத்திரம் புரியக் கயிலைமலையுச்சி சேர்ந்து வீற்றிருந்தனர். தேவர்களெல்லோரும் வணங்கியிருந்தார்கள்.

## வீரையானது.

வெள்ளியங்கிரியில் அருளோடு வீற்றிருக்கருளும், சமயத்தில் உலகமாதாவாகிய தேவியைப்பார்த்து, உன் பாதச்சிலம்பில்வந்த ஒன்பது பெண்கள் கொண்ட கருப்பம் வெளிப்படா திருக்கச்சாபம் கொடுத்தனையே, அதனால் அவர்கள் வருந்துகிறார்கள். அந்தக்கருப்பத்துள்ள சிசுக்கள், உனது குமாரவேலனுக்குத் துணைவராய், தூணினின்று வந்த நரசிங்கமும் பயப்படும்படி, கையாற் புடைக்கும் வல்லமைபெற்றவர்களானவர்கள். ஆதலால் கருவுயிர்க்கும் வகைசெய் எனப்பரமசிவம் கூறினர் உமையவளும் அவ்வாறே ஆகுக என்றனர். சிவமலையிடத்தே தவம்புரிந்துள்ள ஒன்பது பெண்களும் வீரவாகு, வீரகேசரி,

வீரதீரன், வீரபுராந்தகன், வீரமஹேசுரன், வீரமகேந்திரன், வீரமார்த்தாண்டன், வீராசுஷேன், வீராந்தகன் என்னும் ஒன்பது வீரர்களை உதித்தார்கள், அந்தப்பெண்களின் வெயர்வையில் ஒருலக்ஷம் வீரர்கள் பிறந்தார்கள். இவ்வீரர்களின் பெருக்கத்தால் அந்தத்தலத்துக்கு வீரமாபுரம் எனப் பெயராயிற்று.

இப்படியுள்ள வீரர்களெல்லோரும் சிவமலையிலிருந்து அரிய தவம் செய்தார்கள். பரமசிவம் பிரத்தியக்ஷமாய் என்ன வரம் வேண்டுமென்றனர். சுவாமி! தேவரீரது திருவடித்தொண்டு செய்திருக்கும் வரமே வேண்டுமென்றனர். மகிழ்ந்த சிவபெருமான் வீரரை நோக்கி, வேலாயுதத்தைத் தரித்துள்ள இந்த அக்கினி புத்திரன், உங்களுக்கு மூத்தோன். யாவருக்கும் மேலானவன். இவனின் உத்திரவுப்படிக்கு ஏவல்செய்து கொண்டிருப்பீர்களானால், புவனமுழுதுமீன்றவளுக்கும் தொண்டு செய்வதனால் ஆயிரமடங்கு அதிகபலனை இவன் கொடுப்பன்; எனக்கூறி விடைகொடுத்து கைலைசென்றனர். இவ்வீரர்களுடனே சுப்பிரமணியக்கடவுள் அவ்வனத்தில் பலவிளையாடல்கள் செய்துகொண்டிருந்தனர்.

## அகத்தியமுனி உபதேசம் பெறல்.

சத்தி வேலாயுத மூர்த்தியாகிய கந்தப்பெருமான் நவவீரர்களாதியர்களுடனே கூடித் திருவிளையாடல் செய்தருளியிருக்கும் காலத்தில், அகஸ்தியமுனிவர் சுப்பிரமணியக்கடவுளை வந்து வணங்கினர். பரமசிவனும் தெளிந்திடாத வேதப்பொருளை எளியேன் அறிந்துய்யுமாறு அருளித்தனை. பதஞ்சலிமகாமுனிவர் முதலியோர்கள் உரைத்த வடமொழிக்கு எதிர்க்கத், தென்மொழியாகிய தமிழிலிலே எல்லாம் அடியேனறியும் வண்ணம் தெரிவித்தனை. ஜனனத்தனை நீக்கி நின்மலன் திருவடியில் சேர்க்கும் சித்தாந்த மார்க்கத்தை அருள வல்ல மெய்ம்மையான ஆகம மார்க்கத்தை எளியேனுக்கு அநுக்கிரகிக்கவேண்டுமென்று அகஸ்தியமுனிவர் வணங்கிக் கேட்டுக்கொண்டனர். கரு

லைக்கேட்டவாகிய குருநாதமூர்த்தியானவர் புன்சிரிப்புடன் சொல்வாராயினர் தருமசிந்தனை, தவநெறி, வேதப்பொருளுணர்ந்துளல்; பிறவிப்பிணியை நீக்கும் மனம், எல்லாவுயிரிடத்தும் இரக்கம், சிவபஞ்சாக்ஷர ஜபம் முதலிய மற்ற சற்குணங்களுடன் நிறைந்தபெற்றுச் சுத்தரா இருப்பவர்களுக்கு ஆகமம் கூறலாம். தானம், யாசகம், பொறுமை, தவம், ஒழுக்கம், குலம், கல்வி, வித்தை, அகப்புறப்பூசை, நற்குண முதலியனவெல்லாம் உன்னிடத்து அமைந்திருக்கின்றன; ஆதலால் உனக்கு ஆகமத்தைச்சொல்லலாம் எனக்கூறி நவவீரர்கள் முதலியோரைப்பிரிந்து, ஆத்மிக நிமுலுக்குத்தனித்து வந்து இருந்து அகஸ்தியமுனி தெளியும்படி சுப்பிரமணியர் உபதேசிக்கின்றார்.

எனது பரம பிதாவாகிய சதாசிவமூர்த்தியினது நான்கு திருமுகங்களிலிருந்து நான்கு வேதங்கள் தோன்றின. அந்நான்குமுகத்துக்கும் மேன்முகமான உச்சிமுகத்திலிருந்து ஆகமம் தோன்றின. அந்த ஆகமத்தை எனது அம்மைபிராத்திக்க, எமது பிதா உபதேசித்தார், அவர் மடியிலிருந்து நான் கேட்டுக்கொண்டிருந்தேன். அதனைச்சுருக்கிக் கூறுவேன் என்றனர் சுப்பிரமணியர். ஆகமாந்தம் என்னும் சித்தாந்தத்தின் சாரமானது என்னெனில், பதி-பசு-பாசம் எனப்பதார்த்தம் மூன்று. பதியெப்படி அநாதியோ அதுபோலப் பசு பாசமும் அநாதி. ஆனால் பதியிடத்துப்பாசம் அணுகாது. பதிபொருந்தினல்பாசம் நில்லாது" எனத்திரிபதார்த்த லட்சணத்தைச் சுருக்கமாகத்திரட்டிக் கூறினர். ஆகமங்களை யெல்லாம் ஒருமுறைசொன்னவுடன். குறுமுனி தெரிந்துக்கொண்டனன். சொல்லும் பொருளும்போல நிறைந்துள்ள பூரணவடிவத்தின் தன்மையை மருள் கெடும்படி நன்கு தெளிந்து கொண்டனன் அகத்திய முனிவன்.

## அகத்தியமுனி பூசைசெய்தல்.

எனது தந்தை தாயினும் விசேஷமான கந்தவேளே! உன் அன்போடு பூசனைசெய்ய வேண்டுமென்ற விருப்பத்தோடு

இருக்கிறேன் என அகத்திய முனிவர் வேண்டினார். ஒருகோடி உதயகால சூரியனைப்போன்ற தேஜசுபிரகாசிக்க, திருமுன்னா மயில் வாகனத்தின்மேல் ஆறுதிருமுகங்களும் வேலாயுதபாணியுமாய்ச் சுப்பிரமணியக் கடவுள் தோன்றினார். அகத்தியமுனிவர், கண்ட தீர்த்தத்தில் கண்டுகையிலிருந்த கங்கா தீர்த்தத்தைக்கலந்து, அத்தீர்த்தத்தில் முழுகித் திருவெண்ணீறுபூசி உருத்திராக்ஷ வடங்களணிந்து, ஷடாக்ஷர மந்திரஜபம் செய்துகொண்டு கந்தசாமியது திருமுன்புவந்து நெய் முதலாகச் சந்தனக்குழம்பு ஈறான திரவியங்களையுங் கங்காதீர்த்தமும் அன்புடன் அபிஷேகம் புரிந்து, வஸ்திரம், ஆபரணதிகள், புஷ்பவகைகள், சந்தனம் சாத்தி, அன்னம் அபூபவகைகள் திருமுன்பு நிவேதனம் செய்து, ஆசமன அருக்கியபாத்தியாதி ஆகிய பதினாறுவகை உபசாரங்கள் புரிந்து, பூசைகளெல்லாம் சம்பூரணம் செய்தனர்.

திருமுன்னின்று திரிமூர்த்திகளினும் மேலான சிவபரனு க்கு உபதேசகுருவே! உனக்கு வந்தனம். உமைமைந்த வந்தனம் தேவர்களுக்கெல்லாம் தேவனே! வந்தனம், அசுரர் துன்பத்தை தொலைக்கவந்த கருணைக்கடலே! வந்தனம். உன்னை துதிப்பவர்களுக்கு'பத்தி, புத்தி, சித்தி முதலிய பெரும்பேறுகளை அளிக்க எழுந்தருளிய சிவமலைக் கொழுந்தே உனக்கு வந்தனம்! வந்தனம்!! எனத்தோத்திரித்தனன். சிவமலையாண்டவன் கருணைகூர்ந்து ஏ குறுமுனிவ! உனது பூசையும் தோத்திரமும் உவந்தனம் உனக்கு வேண்டியவரத்தைக்கேள் என்றனர்.

கருணாமூர்த்தியே! அடியேன் பூசைசெய்கின்ற இந்தக்கார்த்திகைமாதம் பௌர்ணமி, கார்த்திகைநாள் கூடுகின்றநாளில் இந்தக்கிரியைத் தரிசனம் செய்தவர்கள், இந்நகரில் வந்திருந்தவர், இங்கு வருதற்கு முயர்ச்சிசெய்தவர்கள் மனதால் ஒருகணப்பொழுதேனும் நினைத்தவர்கள் யாவரேயாயினும், அவர்களுடையபாதகங்களெல்லாம் போக்கிப்,போகத்தை யநுபவித்து பதவி பெறவேண்டும். என்றால் காணப்பட்ட தீர்த்தத்தைக்

கண்டவர்கள், தொட்டவர்கள், முறைப்படி முழுகினவர்களும், எழுமைப்பாவமும்போய் நற்கதி பெறவேண்டும். இவ்வாறு [illegible] ண்டியபடி அநுக்கிரகித்து முனிவனைப் [illegible] விடைகொடுத்து, தூணைவீரர்களோடு [illegible] சிவமலையாண்டவர் திருவிளையாடல் புரிந்[illegible]

## அநுமன் பூசைசெய்[illegible]

முன்காலத்திலே மேருகிரியின் [illegible] வந்து விழும்படி வீசிய வலிபொருந்திய வாயுதேவனின், பிரிய குமரன் பராக்கிரமுள்ள அநுமான் என்னும் வீரன், சுப்பிரம ணியரை மனதில் நினைத்துள்ளவன். அசுரர்களை எதிர்த்துத் தொலைத்தவன். அவன் தவஞ்செய்யச் சிந்தை[illegible]ன் வைதிக ராஜதானியான காசிநகர்க்குச் சென்று கங்கையிலே முறைப்படி தோய்ந்து, வெண்பொடியுங் கண்மணியும் [illegible]. பஞ்சாக்ஷரத்தைச் ஜபித்துக் கொண்டு விசுவநாதனைத் தரிசித்து ஆலயவலமாய் வரும்பொழுது அவ்வாறேவருகின்ற வியாசமுனி வரைக்கண்டனன். உபசாரமொழிகள் பேசித்திரிகால ஞான முள்ள முனிவரே! பூலோகத்தில் தவஞ்செய்தற்கு அதிகமான ஒரு தலத்தைச்சொல் என அநுமன் கேட்டனன். சூரியபகவா னிடத்து அருமையான கலைஞானங்களையெல்லாம் அறிந்த அநு மானே! எண்ணியவரத்தைக் கொடுத்து கதியையும் அளிக்கத் தக்க தலமானது சிவமலை எனப்பெயரியது. அத்தலத்தில் எழு ந்தருளியிருக்கும் சரவணபவனை அருச்சித்தால், இவ்வுலகத் துள்ள எல்லாதலங்கள் தோறுஞ்சென்று சிவ[illegible] கணநாதனை, குகப்பெருமானைத் தரிசித்த பலன்[illegible] லாம் கொடுக்கும். அந்தத்தலமானது, வராகமிதிந்[illegible] காவேரி நதிக்குத்தெற்கு, பேரூருக்குக் கிழக்கு, கந்நூருக்கு மேற்கு, இதன் மத்தியில் இருக்கிறது என்றனன். உடனே அநுமன் புறப்பட்டு நருமதைநதியை அடைந்து முழுகி ஒரு லிங்கமெடுத்துக்கொண்டு சிவமலையை யடைந்து வணங்கிக் கா ஞ்சிநதியில் முழுகி மலையில் ஆகமமுறைப்படிக்கு சிவலிங்கப்பிர திஷ்டை செய்தனன். அபிஷேகாதிகள் புரிந்து தோத்திரஞ்

செய்தனன். பிரதக்ஷிணமாக வரும்பொழுது ஆக்கிமாகிழலில் எழுந்தருளியிருக்கும் குமாரக்கடவுளைக் கண்டனன. மகிழ்ச்சி பரவசத்துடன் கொண்டனன். கங்கையிலபிஷேகம் புரிந்து தெய்வலோகதருக்கற்பகப்பூக் கொணர்ந்து அர்சித்துத் தோத்திரித்தனன்.

சுந்தரசாமி மயில்வாகனரூடராய்க் காட்சிக்கொடுத்து "வாயுபுத்ரா! உன் பூசையை மகிழ்ந்தோம் வேண்டியவரத்தைக் கேள்" என்றனர். அநுமன் மனமுருகி "ஐயா, உன்பததியானம் செய்திருக்கலானவரம் வேண்டும்" என்றனன். அருகில் வாவென்றழைத்து மேனியைத்தடவி "அநுமானே! இரணியனது கொட்டத்தை யடக்கும் பொருட்டு தூணில் வெளிப்பட்ட நரசிங்கத்துக்குச் சமானமான புஜபலம் உனக்கு உண்டாகும்" என வரங்கொடுத்து, இனி கந்தாசலமும், கற்பகப்பூவும் கொண்டுவந்து அருச்சனை செய்துக்கொண்டு இங்கே இரு. பின்னிட்டு முத்தியுங்கொடுக்கிறோமென்று தமது திருவுருவில் மறைந்தனர்.

நாரதமுனிவர் காசி, காஞ்சிமுதலிய தலதரிசனஞ் செய்துக்கொண்டு சிவமலைக்கு வந்து உமாதேவியார், சிவபெருமான், சுப்பிரமணியர் தரிசனம் செய்து வரும்பொழுது அநுமனைப் பார்த்து "கற்பகப்பூ இங்குவந்த காரணம் என்ன வென்று கேட்டனர். "சுப்பிரமணியக்கடவுளுக்குக் கற்பகப்பூ கிடைப்பது அரிதோ, என்றனன். அநுமான். நாரதமுனிவர் தேவலோகம் போயினர். நெடுநாள் ஒரு நாள்போல சிவமலையப்பனைப் பூசித்துக்கொண்டிருந்து ஒருநாள் என் அப்பனே! எனக்கு முத்தியருளல் வேண்டுமென அநுமன் வேண்டினன். வேண்டியவரத்தை அடியார்களுக்கு ஈட்டவல்ல கந்தப்பெருமான். "ஏ அநுமானே நீ மேருகிரிக்கு வடபக்கமாகப்போய் தவவடிவாக இரு. நாம் எழுந்தருளியபின்பு முத்தி கொடுக்கிறோம். "எனவிடை கொடுத்தனர். பணிந்து அநுமான் மேருகிரியில் வடபாகில் தவஞ் செய்து கொண்டிருக்கிறான்.

## இந்திரன் பூசை செய்தல்.

ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் தனது அரசாக்ஷி செலுத்திச் சூரபன்மன் செய்யுங் கொடுமைக்கு ஆற்றாதவர்களாய்த் தேவர் முனிவர்கள் மேருகிரிச் சாரலில் வசித்து வந்தார்கள். அப்பொழுது கந்தமாதன கிரியில் ஒரு திருமுகத்துடன் சுப்பிரமணியக்கடவுள் விளையாட்டாக, விந்த முதலியவற்றைப் பிடுங்கியும், மலைமேலுள்ளவற்றைத் தரையில் நட்டும், பாற்கடலை உப்புக்கடலாக்கியும், நக்ஷத்திரங்கள் நிலைபெயரும் படிக்கும், திக்கயங்களை மாறவித்தும், அஷ்டநாகங்களையும் ஒருதிக்குக்கு வரச்செய்தும், தேவர்களைப் பூலோகத்தில் நட்டும் பல அரிய காரியங்களைச் செய்திருந்தார். இராக்ஷசர்கள் செய்யும் மாயம் இது என்று நினைந்து தேவர்களும், இந்திரனும், வந்தார்கள். தேட ஒருவரும் அகப்படவில்லை. குமரக்கடவுளைக் கண்டார்கள். வஞ்சக வேடம் போட்ட அசுரனாகுமிவனென்று எண்ணி யுத்தம் தொடங்கினார்கள். தொடுத்த பாணங்களெல்லாம் குமரன் பாதத்தில் பணிந்து சென்றன. இவன் சிவனல்ல, விஷ்ணுவல்ல, பிரமனல்ல, வீரபத்திரனுமல்ல அல்லாமலும், சிங்கமுகாசூரனுமல்லன், சூரபன்மாவுமல்லன், தாரகாசூரனுமல்லன், ஆனதால் மற்றவர்கள் புஜபலம் நமக்குச் சமானமாகுமா? என்று இந்திரன் தன் வச்சிராயுதத்தைக் குமரன்மேல் விடுமுன், அது முருகவேளினடியில் விழுந்து சென்றது. கந்தப்பிரான் ஒரு கணையை ஏவினார். தேவர்களையெல்லாம் விரட்டிச் சென்றது. இதனைத் தேவகுருவந்து வேலவன் பாதத்திற் பணிந்து, "ஐயா, சூரபன்மன் தேவருலகஞ்சென்று இந்திராணியைக் கலக்க நினைத்தான். ஆதலால் தேவேந்திரன் இந்திராணியுடனும், சிலதேவர்களுடனும் மேருகிரிசேர்ந்து வசிக்கிறார்கள். தேவலோகத்திலிருந்த இந்திரகுமாரன் சயந்தனையும், மற்றும் தேவர்களையும் பிடித்துக்கட்டி வீரமகேந்திரத்திற் சிறையாக்கிவிட்டனன். ஏ! வேலாயுதக்கடவுளே! தேவரீர் எப்பொழுது எழுந்தருளக்கூடுமோ என்று காத்திருந்தோம் இப்பொழுது.

அரக்கனென நினைந்து தேவர்கள், கணைகளை எய்து விட்டனர். அது தேவரீர் பாதத்தைப் பணிந்து சென்றது. குமாரக்கடவுளென அறியாது செய்த தப்பிதத்தை மன்னிக்கவேண்டு"மென மன்றாடித் தேவர்களும் முறையிட்டார்கள். தேவர்களே! நீங்கள் மேருகிரியிடத்து இருங்கள் என முருகவேள் விடை கொடுத்தனர். வியாழபகவான் தேவர்களைப் பார்த்துத் "தேவர்களே, எம்பெருமானென்றறியாது வச்சிரமுதலிய ஆயுதங்கொண்டெறிந்தபாவம் நீங்கும்படிக்கு பரதகண்டத்தில் தக்ஷிண தேசத்தில் காவேரிநதிக்குத் தென்புறமாகச் சிவமலையென ஒரு புண்ணியமலையிருக்கிறது அதிற்சென்றுபூசனைபுரிக எனத்தேவேந்திரன் சொல்வான். தக்ஷிண தேசத்தில் சூரனுடைய கிளைகளிருக்கிறார்கள். அவர்களால் தொந்திரவு நேருமே என்றான். "ஆனால் அங்குச்சென்று பூசிக்குங்காலம் சமீபத்திருக்கிறது அப்பொழுது செய்யலா"மெனப் பொன்னவன் சொன்னான். எல்லோரும் மேருகிரியிலிருந்தார்கள். அசுரர்கள் துன்பம் சகிக்காத தேவர்கள் கைலைசென்று பரமேசுரனிடம் அழுதார்கள். பரமேசுரர், குழந்தைக் குமாரனை அழைத்து மடியிலிருத்தி அரக்கர் குலங்களை நாசஞ்செய்து தேவவுலகத்தை இந்திரனாளும்படி செய்யுமாவெனக் கட்டளையிட்டனர். அவ்வாறே லட்சத்தொன்பது வீரரால் தேவர்களுடன் சென்று அசுரர்களை வேரறுத்து தேவலோகத்தில் அரசு செய்யும்படி இந்திரனை இருத்தி தெய்வயானையை மணந்து கைலையங்கிரியில் குமாரக் கடவுள் வீற்றிருந்தனர்.

இந்திரன் செல்வச் செருக்காலும், மாதராசையாலும் சிவ கலத்திற் சென்று பூசிப்போம் என்பதில்லாதிருந்தமையால் புத்தி மாறாட்டமாய்விட்டான். நாரதர் அங்குச்சென்று இந்திராணியைக்கண்டு, இந்தமாறாட்டந்தீருதற்கு தேவர்கள், தோத்திரஞ்செய்யத் திரிபுரத்தை தகித்தும, நரசிம்மனுடைய பலம் வரும்படியாக அநுமனுக்கு வரங்கொடுத்த, சிவமலையாண்டவனைப் பூசித்தால்தான் இப்பாவம் நீங்குமென மொழிந்தனர்.

தேவேந்திரன் முன் சசிதேவிசென்று நாரதர் கூறிய வற்றைத் தெரிவித்தனள் "ஆம். ஆம். சூரசம்மார மானவுடன் சென்றிருக்க வேண்டும் தவறியதால்தான் இத்துன்பம் வந்தது" என்று கூறித் தேவர்கள் சூழப் பொன்னுலகைவிட்டுச் சிவமலைக்குவந்து வணங்கி சிவமலையாண்டவனை அபிஷேகாதி உபசாரங்களால் பூசித்துத் தோத்தரித்தனன். சிவமலைப்பெருமான் பிரத்தியக்ஷமாய் "இந்திரா! மகிழ்ந்தனம். பொன்னாட்டை ஆண்டுக்கொண்டிரு; முடிவில் இறுதியில்லாத முத்தியின்பத்தைக் கொடுக்கிறோம்" எனவரமருளினர். இந்திரனும் சந்தோஷமுற்று பொன்னாட்டு அரசைக் கைக்கொண்டு சந்தோஷமாக வாழ்ந்திருந்தனன்.

## நகுடன் சாபந் தீர்த்தல்.

பூலோகத்து அரசர்களிற் சிறந்த நகுஷன் என்னும் வேந்தன் நூறுயாகத்தை வெகுசிரத்தையோடு செய்தனன் சப்தரிஷிகள் பல்லக்குத் தாங்கிக்கொண்டு வந்து "ஏ மன்னனே நூறுயாகம் செய்தவர்கள் இந்திரப்பட்டம் பெறுவார்களாதலால் அந்தப்பட்டத்தை நீபெறுதற் பொருட்டுச் செல்ல வேண்டிய மரியாதைப்படிக்குப் பல்லக்குக்கொண்டு வந்திருக்கின்றோம் புறப்படு" என்றனர். மெத்த சந்தோஷத்துடன் பல்லக்கிலேறினன் ரிஷி சிரேஷ்டர்கள் சுமந்துகொண்டு போகின்றார்கள். இந்திராணியைச் சேரவேண்டுமென்ற ஆசையால் (சர்ப்ப) சீக்கிரம் நடவுங்கள் என்றான். சீக்கிரம் என்பதற்கு வடமொழியில் சர்ப்ப என்பதுபொருள் ஆனதால் "சர்ப்பமாகப் போகக்கடவாய்" என முற்கொம்பு தாங்கிச்செல்லும் அகஸ்தியர் கோபமாகச்சபித்தார். உடனே அரசன் மலைப்பாம்பாக விந்தகிரிக்குத்தெற்காக காளஹஸ்திக்கு மலைச்சார்பில் விழுந்து கிடந்தான். வெகுநாளைக்குப் பின்பு துருவாசமுனிவர் காசியில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பின்பு குற்றால தரிசனஞ்செய்ய வந்தார் நகுடன் பாம்பாகக்கிடப்பது தெரியாது இது பாறையென்று ஏறினர். நல்லறிவுவந்து தனக்கு அகத்தியரால் நேர்ந்த சாபத்

தைச்சொல்லித்தன் வடிவு வரும்படி அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். "அகத்தியமுனிவர் சாபத்தை மாற்ற ஒருவராலும் முடியாது; ஆயினும் என்மனதிற் றோன்றுகின்ற ஒரு உபாயஞ் சொல்கிறேன்; அகத்தியமுனிவருக்குச் சிவாகம முற்றிலும் ஓதியருளிய கந்தப்பன் ஆலயத்தைப் பிரதக்ஷிணம் வந்து வணங்கினால் இந்தப்பாம்பு வடிவம்போகும்" என்றனர். அந்தக்காலம் தெரிவிக்க வேண்டுமென்று வேண்டிய நகுடனுக்கு முனிவர் கூறுவாரானார்.

"நகுடராஜனே! தேவர்களிற் சிறந்தவர்களான பிரமன், விஷ்ணு, ருத்திரன் எனமூவரும், அரசர்களிற் சிறந்தவர்களான பாண்டியன், சோழன், சேரன் எனுமூவர்களும், மேன்மக்களான வேளாளர்களிற் சிறந்தவர்களான மன்றாடி, தானஞ்செய்வதில் கன்னனைப்போலக் கொடுக்கும் பெரிய கையையுடைய சர்க்கரை மன்றாடி மன்னன், சொல்லுதற்கு அரியகீர்த்தி வாய்ந்த பல்லவராயக் குரிசில் ஆகிய மூவர்களும், மற்றைய வேளாளர்களும் வழிவழியாயடிமை செய்வார்கள் அவர்களுக்குக்குல தெய்வமாகவிருப்பர் என்னையாளுடைய சிவமலையப்பன். அவர்களுடைய உடல், பொருள், ஆவி என்பவற்றை காங்கேயனுக்கே அர்ப்பணம் செய்திருக்கின்ற காரணத்தினால் அவர்கள் வசிக்கும் திருநாட்டிற்குக் காங்கேயநாடு எனப் பெயராயிற்று. இன்னும் அந்நாடு எல்லா வளங்களாலும் சிறந்துள்ளது. அங்குள்ள சிவமலை என்னும் பர்வதத்தில் ஆறுமுகப் பெருமான் சந்ததங்குடியாக இருக்கிறார். அடுத்தவர்களுக்குச் சந்தோஷமாக இந்திரபோகமும், சித்தியுங்கொடுத்துப் பாச பந்தங்களை அறுத்து முத்தியும் அருளுகின்றார். ஆனதால் அந்தக் கிரியை அடைந்து அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, அக்கிரியை மும்முறை வலம் வந்து சிவமலைக்கடவுளைக் கண்டால் உன் பாவமெல்லாம் நீங்கும்" என்றனர். அதனை அன்புடன் கேட்ட நகுஷன், காடு மலை ஆறுமுதலிய வற்றை வாயுவேகமாகக் கடந்து காவேரி நதியில் மூழ்கினான். பவானி சங்கமேசுரரைப்

போற்றினான், திருச்செங்கோடு அர்த்தநாரீசுரரைச் சேவித்தான்; கொக்கராயன்பேட்டை பிரமலிங்கரையும், நட்டாற்றேசுரரென்னும் அகஸ்திய லிங்கரையும், மூளைசை முக்கணீசுரரையும் கொடுமுடி மகுடலிங்கேசுரரையுந் தரிசித்துச் சிவமலையைக் கண்டான்; பணிந்தான். அகத்திய தீர்த்தத்தில் முழுகிக் கிரிப்பிரதக்ஷணஞ் செய்துக் கொண்டு இருபத்தேழுநாள் நியமமான விரதம் பூண்டு தரிசித்து "சுவாமி, எனக்கு நேர்ந்த கொடிய சாபத்தை நீக்கவேண்டு"மென்று பிரார்த்தித்தான். மனது இரங்கிய முருகையன் மயில்வாகனத்தின் மீது எழுந்தருளி "இந்தப் பாம்புடல் நீங்கிப்பழயபடி இந்த உலகத்துக்கு அரசனாக நெடுநாள் வாழ்ந்து, சித்த சுத்தியாய் மலபரிபாகம்பெற்று, இந்தச்சகம் அழியத்தக்கது, மோக்ஷம் நிலையானது என்றறியத்தக்கும் ஞானம் பெற்று ஆனந்தங்கொண்டு எப்பொழுதும் நீங்காத முத்தி இன்பத்தை அடைவா"யென மொழிந்து மறைந்தனர்.

பாம்புடல்நீங்கிப் பழைய உருவங்கொண்டு அரசுபெற்று வாழ்ந்து சிவபெருமானின் திருவடி நிழலையடைந்தனன் நகுஷன்.

## வள்ளிநாயகி திருமணம்.

ஆறுடைய நாயகராகிய குமரக்கடவுள் திருத்தணி மலையில் திருவிளையாடல் புரிந்து வீற்றிருந்தனர். நாரதமுனிவர் வந்து குமரக்கடவுளை வணங்கி, "சுவாமி! எளியேன் வெள்ளிமலைக்குச் சென்றிருந்தேன். அதன் தென்திசையில் ஒருதினைப்புனத்தில் அமைத்த பரணில் அழகிய கவணைக்கையில் வைத்துக்கொண்டு, பருத்ததன பாரத்தால் மெல்லிய இடைதுவள, புன்சிரிப்புடன் குழலுங் கிளியுந்திகைக்கும்படி மெல்லியகுரலால், ஆலோல என்று தினையைத்தின்னும் பறவைகளை ஓட்டிக்கொண்டு சித்திரப் பாவைபோன்ற ஒரு யவ்வனப்பெண் இருக்கக்கண்டேன். இதுவரையில் மூன்று உலகங்களிலும் நான்பார்

த்த பெண்களில் ஒரு மங்கையேனும் இவ்வளவு அழகுள்ளவளாக இருக்கவில்லை அதனால் பார்த்தவுடன் இக்கன்னிகை என் ஆண்டவனாகிய குகப்பெருமானுக்கே தகுந்தவள் எனமனத்தே தீர்மானித்தனன். அந்தப் பெண்மணியின் பேரழகை யோசிக்கிறபொழுது ஓர் எண்ணம் தோன்றிற்று.

“சிவசுப்பிரமணியக்கடவுளானவர் என்னைக் கோபித்துத் தலையிற்குட்டி சிறையில் போட்ட காலத்தில் எந்தத்தேவரும் வந்து காக்கவில்லை. அருட்கடலாகிய குகப்பெருமானே மனது வந்து சிறைநீக்கினார். ஆகலால் அக்கடவுள்மனது மகிழ்ந்திட யாது செய்யலாமென்று ஆராய்ந்து, தேவாங்கத்தில் ஒரு கன்னிகையைப் பிரமன் சிருட்டித்து தவினனோ? எனவும் நினைத்தேன். அன்றியும். அழகியவிஷ்ணு மூர்த்தியினுடைய அவதாரங்களில் கூர்மம் இப்பெண்ணின் பாதமாகவும், மத்ஸியம், இவள் கண்களாகவும், அவருடைய ஆயுதமாகிய சங்கம், அவள் கழுத்தாகவும், அவர் யோகநித்திரை செய்யும் இடமாகிய ஆல், அவள் வயிறாகவும், அவர் படுக்கையணையாகிய ஆதிசேஷன் (படம்) அவளது மர்மஸ்தானமாகவும், அந்த விஷ்ணுவின் மகனான மன்மதனது வாகனமாகிய கிளி, அவளது மொழியாகவும், அம்மன்மதன் யானையாகிய இருள், அவள் கூந்தலாகவும், அவன்குடை அவள் முகமாகவும், அவன் கிரீடம், அவள் முலையாகவும், பரமேசுரனது தலையணி அவளது நெற்றியாகவும், லட்சுமி தேவியின் வீடாகிய தாமரை, அவள் கையாகவும் படைத்தபெண்ணும் என்ன வளப்பம் பொருந்தியதாக இருக்கிறது என்று கேசாதிபாத பரியந்தம் நன்றாகஎடுத்து வருணித்தனன். ஓ; செவ்வேளே! இவ்வகையான அதிரூபவதியான மாதைப் பார்த்தேன். தேவரீர் உடனே அங்குச்சென்று மணஞ்செய்தருளும் எனக்கூறித் தன்வசிப்பிடம் சேர்ந்தனன். உடனே குமாரக்கடவுள் வில்லும் கணையுங் கொண்ட வேடரூபமெடுத்துக் கொண்டு வள்ளிமலைக்கு வந்தனர். வள்ளி நாயகியை கண்குளிரக்கண்டார். அப்பெண்மணியின் சமீபத்திற் சென்று “அடிபெண்ணே! உன்பேர்சொல். இல்

லாவிடில் ஊர்சொல் இல்லையேல் வழியாவது சொல்" என்பது முதலிய வேடிக்கைச்சொல் சொல்லிக்கொண்டிருந்தனர். அப் பொழுது பலவேடர் சூழ வள்ளியின் தந்தையான நம்பி என் பவன் வந்தான். சுப்பிரமணியர் ஒரு வேங்கைமரமாக நின்றார். "நேற்றில்லாது ஆச்சரியமாக இன்று இந்தமரம் காணப்படுகிறது ஏதேனும் நமக்குத்தீங்கு நேரிடுமோ தெரியவில்லை. மரத் தை வெட்டிவிடுங்கள்." என்று வேடர்சொன்னார்கள். "மரத்தி னால் நங்குடிக்குத்தீங்கு வருமோ! புத்தியில்லாது சொல்லுகி றீர்களென்று போய்விட்டான். மறுபடியும் குகன் பழயபடியே வள்ளிநாச்சியாரிடம் பரிகாசவார்த்தை பேசியிருக்கும்போது, வேடர்புடைசூழ வள்ளியின்தந்தை வருவதைத் தெரிந்தவள்ளி வேடவுருவுற்ற குமரனைப்பார்த்து, "ஓடிப்போய்ப் பிழை" என் றாள். கிழ வேதியவடிவாக நடுங்கிக் கொண்டிருந்தார் சுப்பிரம ணியர். நம்பி என்பவன் "மகளே இக்கிழ வேதியன்யார்" என் ன்றான். "காஸ்மீரதேசத்திலிருந்து இக்காட்டில் வரும்போது வேங்கையைக்கண்டு பயந்து வந்தனன்." என்றனள் "மூனறு நாள் இங்கு இரும் அப்பால் வந்து வழிகாட்டுகிறேன்" என்று போயினன். நம்பசிக்காகத் தினைமாக்கொடுத்த வள்ளியாரை! தாகத்துக்கு நீர் இருக்குமிடம் காட்டெனச் சென்று வரும பொழுது ஆனையாக விநாயகர் வந்தனர். கண்ட மங்கை "ஐயா, வேதியரே கொல்லவரும் யானைப் பயத்தை நீக்குவீராயின் உன் இஷ்டப்படி நடப்பேன்" என்றனள். யானை போய்விட்டது. அப் பால் இருவரும் கூடிச்சுகித்தார்கள்.

பின்பு சோலை நிழல் நீங்கித் தினைப்புனத் துப்பரண்மீது வள்ளிநாயகி இருந்தனர். அடுத்த புலத்திலிருந்த தோழி வள் ளியைக்கண்டு, "கண்சிவந்து, உதடுவெளுத்தது, தேகத்தில் சுக ந்தவாசனை, நெற்றியில் வேர்வை, மனவேறுபாடு முதலிய குறி கள் உன்னிடத்துக் காணவேண்டிய காரணமென்ன வென்ற னள். வள்ளியம்மை விடைகூற அஞ்சினவளாய் "அடிஎன் உ யிர்ப்பாங்கியே! இவ்விடத்து வெயில்சுட்டது, சுனைக்குச் சென்று

தீராடிவரச் சென்றிருந்தேன் "என்றனன். இப்படிப் பேசியிருக்கும் தருணத்தில் இந்தப்பரணிடம் வந்து வேடவுருத்தாங்கிய குமாரன் கைக்கணையால் எய்த விலங்கு இங்குவந்ததா? என்று கேட்டனர். "ஐயா, தாங்கள் கற்றவித்தை தெரிந்து கொண்டேன் எங்கிருந்துவந்தீர் "என்று தோழிகேட்டனள். "வடதிசையிலிருந்து கன்னியாகுமரி ஆடவந்தனம் "என்றனர். இன்னும் பலவிதமாகவேடிக்கை வார்த்தைகள் தோழி பேசிக்கொண்டிருந்து இவர் கருத்தும், கன்னிகை கருத்தும், மயல்பூண்டிருக்கிறது என அறிந்து அடுத்த தினைப்புனத்துக்குத்தோழி சென்றனள். பின்தொடர்ந்து இந்தத் தோழியிடஞ் சேர்ந்து "அன்னம் போன்ற நல்லவளே! என் உயிரையும் உடலையும் உன் தலைவி கவர்ந்து கொண்டாள். அவளுடன் இன்பமான வார்த்தைகள் பேசும்படி காலத்து உதவிசெய்வாயானால் உனக்குப் புண்ணியமுண்டு "என்றனர். "எங்கள் குடிக்குப் பழிச்சொல் தேடிவைக்கப் பார்க்கிறீரோ? பேசாமல் ஓடிப்போ" என்று கோபக்குறியுடன் பாங்கி கூறினள். குகப்பெருமான் தீரத்துடன் "நல்லது என்னுடன் வள்ளிநாயகியை அனுப்பினுலாச்சது இல்லையேல் அவள் உருவத்தை எழுதி பனைதூலைக் குதிரையேறி அவள் பெயரைச் சொல்லிக்கொண்டு திரிகிறேன் பார் "என்றனர். பாங்கி அச்சங்கொண்டனள். வள்ளிநாயகி யிடம் இச்சங்கதி தெரிவித்து மறுபடி இவரிடம் வந்து "எங்கள் எஜமானியிடம் செல்லும் "என்றனர். சென்று கூடியிருந்தார்கள். தினை விளைந்துவிடவே அறுத்துக்கொண்டு தங்களூருக்கு வள்ளியையும் அழைத்துக்கொண்டு வேடர் சென்றார்கள். வள்ளிநாயகியைக் காணாது இரவில் தனியாகச் சென்று ஊருளிருக்கும் பாங்கியைக் கண்டு அவள் துணைகொண்டு வள்ளிநாயகியை அணைந்தனர். "விடிந்தால் வேடர்கள் கொன்று விடுவார்கள் விடியுமுன் போய்விடு "என்று பாங்கி வடிவேலனுக்குச்சொன்னள். வள்ளிநாயகியை அழைத்துக் கொண்டு பல காடுகள் கடந்து சிவமலைக்கு வந்து சேர்ந்திருந்தனர் குகப்பெருமான். காலை வள்ளிநாயகியைக்காணாது வேடர்கள் மயங்கிக் காலடி அடை

போனதால் சிவமலைவந்து கண்டுபிடித்தார்கள். "கேவலம் இவனோ எம் குலமக்களைத் திருடுபவன் என்பல கணைகளை முருகன் மீது ஏவினார்கள். வருபவைகளைத் திருப்பி வேடர்களை அடிக்க எனச்சிய குமரன் நினைக்கவும், எதிர்த்து வந்த லட்சம் வேடர்களும் மாண்டார்கள். அப்பொழுது நாரத முனிவர் வந்து சிவமலையப்பனை வணங்கினார். "வள்ளி நாயகியாரை வளர்த்தவர்களைக் கொல்வது தருமமாகுமோ ஐயா," என்று முருகனை, முனிவர் இரந்து கேட்டனர். ஆறுமுகத்தோடு காட்சி கொடுத்தனர். வள்ளியம்மை தரிசித்து உடல் நடுங்கி "சுவாமி வேட உருவம் எடுத்து அடியாளைச் சோதிக்கலாமோ! எளியேன் பல தவறு செய்தேன் மன்னிக்க வேண்டும்! என்னை வளர்த்தோர் மாண்டது என் பொருட்டன்றோ? ஆதலின் ரக்ஷிக்க வேண்டு"மென வேண்டினள். "வேடர்கள் எழுக" என முருகவேள் மன திருதயமாகவே இறந்த வேடர்களெல்லாம் உயிர் பெற்றெழுந்து சந்தோஷ ஆரவாரஞ் செய்தார்கள்.

எழுந்த வேடர்கள் சுவாமியைப் பணிந்து எங்கள் குலதெய்வமே! என்பணிந்து கூறுகிறார்கள் "எங்கள் குலத்துக்கில்லாத ஒருகுறை நேர்ந்தது, விவாகபாகாக கன்னிகையைத் தேவரீர் திருடிவந்தது ஆயினும் எங்கள் ஊருக்கு வந்து கிரமமாக விவாகம் செய்துகொண்டு வள்ளியுடன் கூடியருள வேண்டுமென்றனர். 'அப்படியே ஆகுக' என்று வேடர்கள் சூழ நாரதனுடன் வள்ளி மலைக்குச் சென்று விவாகம் செய்துகொண்டனர் தேவர்கள் பூமாரி பெய்தார்கள். வேடர்களிடம் பிரயாணம் சொல்லிக்கொண்டு வள்ளியம்மையுடன் சிவமலை வந்து திருவோலக்கமாக எழுந்தருளி யிருந்தனர்.

முருகவேளுடன் எதிர்த்துப்பட்ட வேடர்கள் பின் உயிர் பெற்று ஆலித்ததால் (களித்ததால்) இவ்வூருக்குப் பட்டாலி என்றும் பெயர் உண்டாயிற்று.

## வள்ளிநாயகி தருமஞ் செய்தல்.

சிவமலையில் எழுந்தருளி யிருக்கும் சிவசுப்பிரமணியக் கடவுளை வணங்கி "சுவாமி! மேரு முதலிய பலமலைகளிருக்க, இந்தமலையில் அதிகப்பிரியமாகத் தேவரீர் எழுந்தருளி யிருக்குங் காரணம் தெரிவிக்கவேண்டு"மென்ற வள்ளியம்மையை நோக்கி முருகவேள் கூறுவார்

---

படு ஆலி = பட்டாலி

பூர்வகாலத்தில் சிவபெருமானை நோக்கித் திருமால் தவஞ் செய்தனன். அவர் கண்ணிலிருந்து ஆநந்தக கண்ணீர் இரண்டு துளி பூமியில் விழுந்தது. அமுதவல்லி, சுந்தரவல்லி என இரண்டு மாதர்கள் உதித்தார்கள். நான் அவர்களைக் கருணையால் பார்த்து உங்களில் ஒருத்தி இந்திரன் மகளாயும், மற்றொருத்தி சிவமுனி என்பவரிடம் ஒருமான் வரும், அதனைக் கூடுவர். அம்மான் வயிற்றிற் பிறந்து, வேடர் சேரியில் வளர்ந்தால் நான் வந்து காந்தர்வமணமாகச் சேர்வேன் எனவே இருபெண்களும் சென்றார்கள். அப்படியே உதித்தார்கள் இன்பசுகங் கொடுக்கின்றேமென்றனர் வள்ளிநாயகி மகிழ்ந்து அடிபணிந்து "ஐயா, நான் ஒருத்தியாயிற்று; மற்றொரு மடந்தை யாவளெனவே, திருத்தணிமலையிலிருக்கின்றாள் நீ கண்டாய் என்று கூறினர். மேலும், நீங்களிருவரும் தவஞ்செய்த நாடானதாலும், பரமமாதா பிதாக்களான சிவ சத்தி இருவரும் வசிக்கும் மேருகிரியின் ஒரு சிகரம் இது ஆனதாலும், எனது அன்னை தவஞ்செய்தமையாலும், எனது துணைவர்கள் ஒருலட்சத்து ஒன்பதின்மர் உதித்த இடமாதலாலும், எனது அன்பனாகிய அகத்தியமுனிவர் எம்மைப்பூசித்து வரம்பெற்ற இடமாதலாலும், அநவரதம் அகலாமல் அநுக்கிரகித்துக் கொண்டிருக்கின்றோம் இம்மலையில் என்றனர். "அரிய தவமானதால் இதில் தருமஞ்செய்ய என்மனது கூடுகிறது" என அம்மையார் கூறினள் குகப்பெருமான் கூறுகிறார் "எனது மாதா காஞ்சிபுரத்தில் முப்பத்திரண்டு தருமஞ் செய்தனள். நீயும் செய்வாயாக அம்மை; அதைச்சலூர் என்னும் புண்ணிய க்ஷேத்திரத்திற் சென்று, இளங்குழந்தை தலைக்கு எண்ணெய் கொடுத்தல் முதலிய முப்பத்திரண்டு தருமங்களையும் செய்வாயாக" எனக்கட்டளையிட்டனர். வள்ளிநாயகியார் இறைவனாணைப்படி அவ்வூருக்குச்சென்று முறைப்படிக்குத்தருமம் புரிந்து கொண்டிருந்தனள். பலநாள் சென்றபின் எம்பெருமான் மயிலேறி வள்ளிமுன்பு சென்று "வேண்டும் வரங்கள் கேள்" என்றனர். அன்னையாரும் ஐயா, எனக்கு என்னவரம் வேண்டியிருக்கிறது? நான் வணங்கிய தேவர்கள் என்னை வணங்கவும், நீர் மாலைசூட்ட அருகிலிருக்கவுமான பெருமபேற்

றை யடைந்திருக்கிறேன். ஆனால் நான் தருமம் நடத்திய இந்நகருக்கு என்பேர் விளங்க வேண்டுவதுதான் நான் இப்பொழுது வேண்டும் வரம் என்றனள் "அறசனூர் என்றும், வள்ளியறச்சாலை யென்றும் இந்நகர்க்குப்பெயர் ஓங்கும்" என்றனர். பின்பு மயில் வாகனத்தின்மீது எழுந்தருளித் தணிகைமலைக்குச்சென்று தெய்வானையைக்கண்டு இரண்டு தேவிமார்களும் இருபுறமும் விளங்கப் பலநாள் அங்கிருந்து சிவமலைக்கு எழுந்தருளினார்கள். அகத்தியமுனிவர் வந்து சிவமலையாண்டவனையும், அம்மையாரிருவரையும் வணங்கி "சுவாமி, அன்னையரிருவரையுந்தேவரீரையும் இத்தலத்தில் பூசித்திருக்கும் ஆசை பெருகுகின்றது என வேண்டினர். வேண்டிய வேண்டியாங்குதவும் அண்ணலாராகிய கந்தப்பெருமானும்பிராட்டியாரிருவரும் அங்குள்ள திருவுருவத் திடத்து விளங்கினார்கள். பூசித்து, அகத்தியமுனிவர் விடைப்பெற்றுப் பொதியமலை அடைந்தனர்,

## தீர்த்தச் சிறப்பு.

எல்லாக்குணமும் சிறப்பும் பொருந்திய முசுகுந்தன் என்னுஞ்சக்கிரவர்த்தி திருவாநிலையென்னும் க்ஷேத்திரத்தில் பசுபதிஈசுரரைத் தரிசித்துக்கொண்டு வாழும் நாளில், கௌதமமுனிவன் அங்கு வந்தனர். எங்கிருந்து இங்கு எழுந்தருளுகின்றீர் எனக்கேட்ட முசுகுந்தனை நோக்கி, மன்னவா? நான் தீர்த்தயாத்திரைசெய்து வருகின்றேனெனவே, தீர்த்தங்களில் முழுகினால் எனக்குள்ளிருக்கப்பட்ட நோய் தீருமோ என்றனன். நோய் தீருவது மாத்திரமல்ல, சித்தி முத்தியுந்தரும் என்றனன். அவ்விதமுள்ள விசேஷதீர்த்தம் எதுஎனவே, இவ்விடத்துக்கு மேற்றிசையில் வீரைமாநகரம் என ஒருபதியிருக்கிறது. அங்கு ஏழு தீர்த்தங்களிருக்கின்றன. அவற்றுள், வேதத்தை மறந்த பிரமதேவன் சிவபிரானைப்பூசித்துச் சத்தி தீர்த்தத்தில் முழுகிவேதத்தைக்கண்டு சிருஷ்டியை நடத்தினான். பூதனையை முலைப்பாலருந்துவதுபோல அவள் உயிரையுண்ட தோஷந்தீரும்படி சத்தி தீர்த்தத்தில் முழுகிக் கண்ணபிரான் ஸ்திரீஹத்தி நீங்கினன். அகத்திய தீர்த்தத்தில் திருதிமுழுகித் திக்குப்பால

கனானன். விசுவாமித்திரனு மத்தீர்த்தே படிந்து ரிஷியானான், நகுடனும் இத்தீர்த்தத்து மூழ்கி மலைப்பாம்பு வடிவு நீங்கினான். அனுமத் தீர்த்தத்தில் மூழ்கிப் பஞ்ச பாண்டவர்கள் சத்துருக்களைச் சயித்துத் தேசமன்னர் திறை தரவாழ்ந்தனர். இந்திர தீர்த்தத்துள் பாண்டுவேந்தன் மூழ்கி பாண்டுநோய் தீர்ந்தான். வாசுகி மூழ்கிக் குன்மநோய் தவிர்ந்தான். பிரமாநந்ததீர்த்தத்தில் பார்வதி பாதச்சிலம்பில் வந்தஒன்பது மாதர்களும் மூழ்கி உமையம்மை சாபம் நீங்கி லட்சத்த ஒன்பது வீரர்களை ஈன்றனர். சித்தர்கள் மூழ்கி ஒளிபெற்றுப்பல யுகங்களிருக்கிறார்கள்; சத்தியபாமை மூழ்கிக் கண்ணனைக் கணவனாகப் பெற்றாள்; பல பத்தர்கள் படிந்து பரகதிபெற்றார்கள். மங்களதீர்த்தத்தில் இரதி மூழ்கி எரிந்த மன்மதன் உயிர் பெற்றுவர இன்பசுகம்பெற்றாள்; வீரதீர்த்தத்தில் சுக்கிரீவன் மூழ்கி இராமனது சிநேகம்பெற்றுப்பகையைப் போக்கிக்கொண்டான். இவ்வாறு இவ்வேழு தீர்த்தத்து மூழ்கினோர் பாவங்களெல்லாம் நீங்கின. இத்தீர்த்தகரையில் பிதுர்க்களைப் பூசித்தால் சிவலோகம் பெறுவார்கள். ஆகலால் நீசெல்வாயாக எனலும், பூரித்து முசுகுந்தனங்கு சென்று இந்திர தீர்த்தத்தில் விதிப்படி தீர்த்தமாடினவுடன் வெங்குன்மம் நீங்கி விட்டது; மன்மதவடிவம் பெற்றான். யானைமுகக் கடவுளைப் பரமசிவத்தை, பார்வதிதேவியை, சிவமலையாண்டவனை, வள்ளி தெய்வயானையைத் தரிசித்து இஷ்டகாமியார்த்தங்களைப் பெற்றுக் கருவூர் சென்று பின்பு முடிவில் கைலைசென்று சிவகணநாதனாக வீற்றிருந்தனன்.

• எனச்சிவமலை மகத்துவத்தைச் சூதமுனிவர் கூறக்கேட்டிருந்த முனிவர்களெல்லாம், உடல் புளகமுற, வார்த்தை தடுமாற, கண்களில் நீர்ததும்பப் பரவசமாகி முனிசிரேஷ்டரே! தங்களைப்போல பத்திரசத்தைப் போதிக்கத்தக்க வல்லார் ஒருவருமில்லையென்று தோத்திரித்தார்கள். சுபம்.

முற்றுப்பெற்றது,



உ

# அட்டவணை.

# பிழை திருத்தம்.

இப்புஸ்தகத்தை எடுத்தவுடன் பிழை திருத்தத்தைச்செய்துகொண்டு படிக்கவேண்டும். வரிஎண்கள், தலைப்புகளை விடுத்து பாட்டுவரிகளைக கணககிடுவது

| பிழை | திருத்தம். | பக்கம். | வரி. |
|---|---|---|---|
| டனற | யயினற | 3 | 14 |
| டொனு | கூடொணு | 5 | 6 |
| சிவகூடமலை | சிவமலை | | 6 |
| ளிருநதி | ளிரிநதிட | 5 | 23 |
| சுருதிபாகம | சுருதியாகம | 6 | 1 |
| ளெனளிலா | ளெணணிலை | | 26 |
| னஙகள | னஙகள் | 9 | 8 |
| பலவுள் | பலவுள | 10 | 2 |
| றென்றே | ருென்றே | 10 | 23 |
| ளளைதைத | ளளைநைத | 15 | 9 |
| றணடு | தணடு | 16 | 7 |
| வநதென் | வநததென் | | 17 |
| தன | தன் | 17 | 1 |
| கநதர | சுநதர | 18 | 2 |
| யுடையவ | யுடையரா | 22 | 13 |
| சன்ன | சனன | | 14 |
| வகுந்திட | வகுததிட | | 20 |
| ளியப்பரு | லியம்பரு | 23 | 1 |
| விகுந்து | விருந்து | | 3 |
| தறக்கு | தறகரு | 23 | 5 |
| ளெனக்குத் | ளெணக்குத் | | 2 |
| யுயிறகு | யுயிாக்கு | 24 | 5 |
| சோநத | சேர்நத | 25 | 16 |
| கர்த்தி | காாததி | | 17 |
| தனுத | தனிற் | 26 | 8 |
| திரண்டா | திரன்று | 29 | 11 |
| ஙவிலூற் | ஙவிலலூற் | | |
| புரயற்து | பாயந்து | 30 | 7 |
| ன் கர | ணகர | | 13 |
| ரிருககு | ரிருகக | 37 | 1 |
| வான் | பான் | | 2 |
| தன்யசவ் | தென்யால் | | 3 |
| யடைத் | யடைத் | 38 | 2 |
| குன்றுள | குன்றுண் | 42 | 5 |
| ரெக்கிட | ரொகதிட | 43 | 11 |
| புன்புற | யின்புற | 45 | 3 |

| பிழை. | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| தொன | தொனறு | 45 | 3 |
| போய | பொய் | 46 | 8 |
| வெள்ளி | ளளி | 47 | 4 |
| பஙகிய | பஙகய | | 22 |
| கரா் | காா் | 50 | 6 |
| முனுறிட | முனுற்றிட | | 21 |
| மேல | மெல | | 29 |
| ன்றேன் | னறே | 51 | 27 |
| செல | சொல | 53 | 13 |
| காரைகா | காரைககா | 54 | |
| மேறை | றேரை | | 15 |
| பஙகைய | பஙகய | | 17 |
| வேநதிற | வெநதிற | | 26 |
| வேள | வெள | 55 | 4 |
| மககு | மகட்கு | | 10 |
| மானப | மாணப | 57 | 2 |
| லுற்றன் | லுற்றள் | 58 | 10 |
| பெறுமை | பெருமை | | 12 |
| சொலவுான் | சொலவான் | 60 | 8 |
| னப் | னம | | 14 |
| னன்று | னென்று | | 23 |
| வரு | வறு | 62 | 27 |
| பர்வை | பாவை | 63 | 8 |
| பேரதாய் | பொரதாய் | 67 | 4 |
| ொழிவாய் | ரழிவாய் | 70 | 2 |
| தொண்மை | தொணமை | 71 | 8 |
| வினையி | வினையி | 72 | 3 |
| பிரஙகி | விரஙகி | | 6 |
| யயிர்ப்பு | யயிர்ப்பு | | 7 |
| கமைபு | அமைவு | | 1[illegible] |
| ரிவாகளு | ரிருவாகளு | 73 | 24 |
| கிகழ்கு | கிளர்க்கு | 74 | 29 |
| வொணி | வேணி | 79 | 1 |